# HE TAMIL VASAGAM

## THIRD BOOK

# ராச் தமிழ் வாசகம்

## மூன்றும் புத்தகம்

(மூன்றும் வகுப்பு)





A. V. D. PACKIAM PILLAI
Book-seller & Publisher
TUTICORIN.

pyright] 1932 [Price As. 3½

# ரோச் தமிழ் வாசகம்

## மூன்றாம் புத்தகம்



A. V. D. பாக்கியம் பிள்ளை,

தூத்துக்குடி.

காப்பிரைட்] 1932 [விலை அணா 3½.

# முகவுரை

---

நமது தமிழ்நாட்டில் அநேக தமிழ்ப் புஸ்தகங்கள் வெளி வந்திருக்கின்றன. ஆனால் நமது கத்தோலிக் பள்ளிக்கூடங் களுக்கேற்ற புஸ்தகம் ஒன்றேனும் இதுகாறும் வெளிவந் திருப்பதில்லை. ஆகையினால் நான் சிறந்த ஆசிரியர்களைக் கொண்டு நமது கத்தோலிக் மாணவர்களுக்கு பிரயோஜனப் படும்படியாக நூதன முறைப்படி இதுவரையிலும் வெளிவந் துள்ள மற்றப் புஸ்தகங்களில் காணப்படாத பல புதிய பாடங்களும், பாட்டுக்களும் தெள்ளிய நடையில் பாலர்கள் மனதில் நன்கு பதியும்படியாக அமைத்து ரோச் தமிழ் வாசக புஸ்தகமென்னும் பெயரால் வெளியிடத் துணிந்தேன்.

இப்புஸ்தகத்தை எனக்கு எழுதித்தந்த ஆசிரியர் அவர் களுக்கும் இன்னும் இதைப் பார்வையிட்டுச் சரியாய்த் திருத் தித் தந்த எனது நண்பர் அவர்களுக்கும் சங்கைக்குரிய சுவாமி அவர்களுக்கும் எனது வந்தனத்தை அளிக்கின்றேன்.

இறுதியாக வந்திக்கத்தக்க மேற்றிராணியார் அவர்களும் சங்கைக்குரிய சுவாமிமார் அவர்களும் ஏனைய கத்தோலிக் உபாத்தியாயர்களும் எனது பிரசுரங்களைத் தங்கள் தங்களு டைய பள்ளிக்கூடங்களில் உபயோகித்து மென்மேலும் கத்தோலிக் பள்ளிக்கூடங்களுக்கேற்ற மற்றும் பிரசுரங்கள் எழுதுவதில் ஊக்கம் கொள்ளுமாறு என்னை அன்புடன் ஆதரிக்கவும் மிகவும் தாழ்மையாய்க் கேட்டுக்கொள்ளுகிறேன்.

A. V. D. பாக்கியம் பிள்ளை.

# கடவுள் வாழ்த்து

---

ஒருவன் இருவன் முத்தொழிலன்
உயிருக் குயிரன் உலகுபுகழ்
திருவன் திருவோடுயர் கலையும்
செழுமை திறமை ஜெயமனைத்தும்
தருவன் தருமபொருள் முழுதும்
சடுதி பார்ப்பான் கடையுகத்தில்
வருவன் எவனே அவன்கழலை
வாழ்த்திப் போற்றி வணங்கிடுவோம்.

(M. P. M.)

# பொருளடக்கம்

# ரோச் தமிழ் வாசகம்.

## மூன்றும் புத்தகம்.



### 1 நமது பாப்பரசர்

1. நமது திருச்சபையின் தலைவரானவர் பாப்பரசர் என்று முன்னே படித்து இருக்கிறீர்கள் அல்லவா? அவர் அர்ச். இராயப்பர் ஸ்தானத்தில் பிரதான சபைத் தலைவராய் அமர்ந்திருக்கிருர். சுமார் முப்பதுகோடி ஜனங்கள் அடங்கிய

திருச்சபையின் தலைவர் அவர் என்றால் அவர் எவ்வளவு பெருமை வாய்ந்தவர்! அவருடைய அதிகாரம் திருச்சபை முழுவதும் செல்லும்.

2. நமது பாப்பானவர் பெரிய அரசராகவும் வீற்றிருக்கின்றார். உலகம் எங்கும் உள்ள அரசர்கள் யாவரும் நமது பாப்பானவருக்கு ஸ்தானாதிபதிகளை அனுப்பி யிருக்கின்றனர். இவர் ரோமாபுரியிலுள்ள வத்திக்கான் என்னும் அரண்மனையில் வசிக்கிறார்.

நமது பாப்பானவர் தமது இளமையில் சிறந்த மாணவராக விளங்கினார். அறிவு நூல்கள் வாசிப்பதில் அவருக்குப் பிரியம் அதிகம். அவர் வாசிக்காத நல்ல நூல்கள் இல்லவே இல்லை என்றே சொல்லலாம். தவிர, அவர் கல்வி அறிவோடு நல்ல உடல் பயிற்சிகளையும் அப்பியாசித்து வந்தனர். உடல் எவ்வளவு உரம் உள்ளதோ, அவ்வளவில் புத்தியும் உரம் கொண்டதாகும் என்பது ஓர் ஆங்கில பழமொழி. அதன் உண்மையை நன்கு உணர்ந்தவர் நமது பாப்பரசரே. அவர் அல்பைன் மலைகளில் அடிக்கடி ஏறுவதில் மிகவும் பிரியம் கொண்டவராக விளங்கினார். விரைவாக மலையேறுவதில் அவரைப் புகழாதவர்கள் இல்லை.

3. நம்முடைய திருச்சபையின் தலைவரான பாப்பானவர் நமக்கு ஓர் அரிய பிதாவாகவும் பெரிய

அப்போஸ்தலராகவும், சுய அதிகாரம் உடைய அரசராகவும்! தவரு வரப்பெற்ற ஞானமேய்ப்பராகவும் இருக்கிருர்.

4. அவர் நமக்கு யாதொரு குறைவும் வராமல் நம்மெல்லோரையும் தந்தைக்கு உரிய அன்போடு நேசித்து வருகிருர். நாம் அவருடைய சொல்லுக்குக் கீழ்ப்படிந்து நடக்கப் பெரிதும் கடன் பட்டிருக்கிரும்.

கடவுள் நமது பாப்பரசரைக் காப்பாராக.



## 2 நன்ருய் வாசிக்கும் முறை

1. சென்னை பட்டினத்தில் ஒரு பெயர்பெற்ற பள்ளிக்கூடம் உண்டு. அங்கே சிறுவர் அநேகர் கல்விகற்று வருவார்கள். உபாத்தியாயர் மிகவும் கவனம் வைத்துத் தங்கள் தங்கள் வகுப்புப் பிள்ளைகளுக்கு எல்லாப் பாடங்களையும் இனிதாகப்

புகட்டினர். மூன்றுவது வகுப்புச் சிறுவர்கள் காலை தோறும் தமிழ் வாசகம் கற்பது வழக்கம். ஒரு நாள் காலையில் ஆசான் "பிள்ளைகளே, ஒவ்வொரு வராக எழுந்து தமிழ்ப் பாடம் வாசியுங்கள்" என்றார்.

2. ஆரோக்கியம் என்னும் சிறுவன் வாசிக்கத் தொடங்கினன். அவன் அதிக பயபக்தியோடு எழுந்து, புத்தகத்தை இடது கையில் பிடித்துக் கொண்டான். கழுத்தைக் கோணுமல் வைத்து, நிமிர்ந்து நின்றுகொண்டான். நெஞ்சுக்கு எதிரே சற்று அப்பால் புத்தகத்தை விரித்தான். தான் வாசிப்பது எல்லாருக்கும் கேட்கும்படியான குரல் கொண்டு மிக்க நன்றாக வாசித்தான். அவனுடைய வாசிப்பு சிறுவர்களுக்கெல்லாம் தெளிவாக விளங்கினது. ஆதலால் சிறுவர்கள் மிகவும் கவனம் செலுத்தி, ஆரோக்கியம் வாசித்த வசனங்களைத் தொடர்ந்து, புத்தகத்தைப் பார்த்துக்கொண்டு வந்தார்கள்.

3. ஆசான் அதிக ஆனந்தம் உற்றவராய், "பேஷ், ஆரோக்கியம் நன்றாய் வாசித்தான். இனி அடுத்தவன் வாசிக்க" என்றார். உடனே ரத்தினம் என்பவன் படபட என்று எழுந்தான். ஆந்தை போல் விழித்துக்கொண்டு, "என்ன, என்ன, எது, எது" என்றான். ஆசான், "அடே, ஆரோக்கியம் நிறுத்தின இடத்திலிருந்து வாசி" என்றார். பிறகு

அவன் அந்த இடத்தை ஒருவாறு கண்டுபிடித்துக்,கடகட என்று வாசித்துக்கொண்டே போனான். அவன் வாசித்த வசனங்கள் தெளிவாகக் கேட்கவில்லை. அதனால் மற்றப் பையன்கள் பாடத்தைத் தொடர்ந்து செல்லவில்லை.

4. ஆசான் அவனை நிறுத்தி, "ரத்தினம், வாசிக்கும் முறை இது அல்ல. ஆரோக்கியம் வாசித்ததுபோலத் தெளிவாக நிறுத்தி வாசித்தல் வேண்டும். ஒரு கதையை வாசிக்கும்போது துக்கமான செய்தி சொல்லப்படும் இடத்தில் துக்கத்தோடு வாசித்தல் வேண்டும். சந்தோஷ செய்தியை உற்சாகத்தோடு வாசித்தல்வேண்டும். சம்பாஷணைகளைப் பேச்சுப் பாவனையில் வாசித்தல் வேண்டும், வினாக்களை உயர்த்தியும் விடைகளைத் தாழ்த்தியும் வாசித்தல் வேண்டும்.

5. மேலும் வாசிக்கும்போது, அர்த்தம் தெரியும்படியாக, நிறுத்தல் புள்ளிகளைக் கவனித்து வாசிக்கப் பழகவேண்டும். ஒரு வாக்கியம் முடிவடையுமிடத்தில் முற்றுப்புள்ளியும், இன்னும் பற்பல விதமான குறிகளும்உண்டு" என்றுசொல்லி தாம்சொல்லிய வண்ணம் அந்தப் பாடத்தை வாசித்துக்காட்டினார். அதைப் பிள்ளைகள் எல்லாரும் கவனத்தோடு கேட்டனர். அதன்மேல் சிறுவர்கள் யாவரும் அவ்விதமே நன்றாய் வாசிக்கக் கற்றுக் கொண்டார்கள்.

---



## 3 உண்மை பேசுதல்

1. ஏழையான விறகு வெட்டி ஒருவன் இருந்தான். அவன் நாடோறும் காடுகளுக்குச் சென்று விறகு வெட்டி ஜீவனம் செய்துவந்தான். அதனால் கிடைத்த வரும்படியைக் கொண்டு அவன் தன் குடும்பத்தை ஆதரித்து வந்தான்.

2. ஒருநாள் அவன் நடுக்காட்டில் ஓர் ஆற்றின் அருகில் இருந்த பட்டுப்போன ஆலமரத்தின் கொம்புகளை வெட்டினான். அப்பொழுது கோடரி கைதவறி ஆற்றின் நடுவில் விழுந்தது. உடனே

அவன் மரத்தினின்று இறங்கி, நீர் அதிகமான ஆற்றில் இறங்கத் துணியாமல், கரையின் மேல் அழுதுகொண்டு இருந்தான்.

3. கொஞ்ச நேரத்திற்குள் சம்மனசு ஒருவர் அவனுக்குத் தரிசனமாகி, ஏன் அழுது கொண்டிருக்கிறாய்? என்று கேட்டார். விறகு வெட்டி அவரைத் தொழுது தன் வருத்தத்தைச் சொன்னான். அருள் நிறைந்த அச் சம்மனசு ஆற்றின் நடுவில் மூழ்கித், தளதள என்று பிரகாசிக்கும் ஓர் தங்கக் கோடரியோடு எழுந்து வந்தார். அதை விறகு வெட்டிக்குக் காட்டி, "அன்பனே இதை எடுத்துக் கொள்" என்றார். அதற்கு விறகு வெட்டி, "ஐயா இது என் கோடரி அல்ல. இது எனக்கு வேண்டாம்" என்று மறுபடியும் அழ ஆரம்பித்தான். ஆதலால் சம்மனசு மீண்டும் ஆற்றுள் மூழ்கி, சூரிய ஒளி வாய்ந்த ஓர் வெள்ளிக் கோடரியோடு வந்தார். அதைக்கண்ட விறகுவெட்டி, "ஐயனே, இதுவும் எனது அன்று. இது எந்தப் பிரபுவின் சொந்தக் கோடரியோ, அறியேன். ஐயோ, என் கோடரியைக் காணேனே" என்று பின்னும் புலம்பி அழுதான்.

4. மகா இரக்கம் நிறைந்த சம்மனசு மற்றும் ஓர் முறை ஆற்றில் மூழ்கி, இரும்புக்கோடரியோடு வந்தார். அதைக் காணலும் விறகு வெட்டிக்கு

உண்டான ஆனந்தம் கொஞ்சம் அல்ல. அவன் அதைச் சுற்றும் முற்றும் பார்த்து, "ஐயா, இதுவே என் கோடரி. நீங்கள் செய்த இந்த அரிய உதவிக்கு ஆயிரம் வந்தனங்கள். இந்த நன்றியை நான் என்றும் மறவேன்" என்றான்.

5. சம்மனசு ஏழை விறகு வெட்டியின் உண்மையைப் பெரிதும் மெச்சிப் பேசி, "அன்பனே, உன் உண்மைக்குப் பலனாக, இந்த மூன்று கோடரிகளையும் உனக்கே தந்தேன். நீ உன் வறுமை நீங்க இனிது வாழ்வாயாக" என்று சொல்லி மறைந்தார். அது முதல் விறகு வெட்டி பெருஞ் செல்வனாயும், பலர்க்கு உபகாரியாயும் புகழுடன் வாழ்ந்து வந்தான்.

"உண்மை உயர்வைத்தரும்"

---

## 4 நல்ல மேய்ப்பன்.

1. மேலே உள்ள படத்தில் நாம் அநேக ஆடுகளைப் பார்க்கிறோம். அவைகள் மத்தியில் ஓர் மனிதன் நிற்கின்றான். அவன் தன் கரத்தில் நீண்ட கோல் ஒன்றைப் பிடித்திருக்கின்றனன். அக்கோல் தலைப்பக்கம் வளைந்தது. அவனுடைய தோள் மேல் ஆட்டுக்குட்டி ஒன்று கிடக்கிறது.

அவன் ஆடுகளை வெகு கவனத்தோடு பார்த்துக் கொண்டு அவற்றின் அருகே நிற்கிறுன். அவன் தான் மேய்ப்பன்.



2. அநேக ஆடுகள் உள்ள கூட்டத்திற்கு மந்தை என்று பெயர். இப்படத்தில் காணப்படும் ஆடுகள் யாவும் செம்மறி ஆடுகள். ஆடுகள்; மேய்ப்பனின் குரல் வழியே செல்லும்; நிற்கவும் செய்யும். ஒன்றன்பின் ஒன்ருகவும் மந்தை மந்தையாகவும் ஆடுகள் செல்லுதலை நோக்குவது வெகு அழகாய் இருக்கும்.

3. நல்ல மேய்ப்பன் நாடோறும் ஆடு களைப் புல் உள்ள இடங்களுக்கு நடத்திக்கொண்டு போய் மேய்ப்பான். வெயில் வேளையில் அவை களுக்குத் தண்ணீர் காட்டுவான். பால் குடிக்கும் சிறு குட்டிகளை மேய்ச்சலுக்குக்கொண்டு போக மாட்டான். அவைகளைக் கூண்டுகளில் அடைத் துப் பந்தோபஸ்து செய்வான். சாயங்காலம் தன் மந்தையை நடத்திக்கொண்டு, கூண்டுகளிடம் வந்து சேர்வான். பிறகு கூண்டுகளைத் திறந்து; குட்டிகளை வெளியேற்றுவான். உடனே அவை கள் தங்கள் தங்கள் தாய்மார் இடம் சென்று பால் குடிக்கும்.

4. நல்ல மேய்ப்பன் தன் ஆடுகள்மேல் மிகவும் அன்பாய் இருப்பான். அவன் அவைகளை ஒருபோதும் அடிக்கமாட்டான். நடக்க இயலாத நொண்டி ஆடுகளைச் சுமந்து செல்வான். இரவில் ஆடுகளுக்குச் சேதம் உண்டாகாதபடி விழித்தி ருந்து மந்தையைக் காவல் செய்வான். ஓநாய், புலி, முதலிய துஷ்ட மிருகங்கள் ஆடுகளைக் கொல்ல வந்தால் அவன் அவைகளை எதிர்த்துச் சண்டை செய்து வெருட்டி விடுவான்.

---



## 5 உடலின் உறுப்புகள்

1. பிள்ளைகளே, நமது உடலின் உறுப்புகளில் மிகவும் முக்கியமானது தலையே. "எண்சாண் உடம்பினுக்குச் சிரசே பிரதானம்" என்பது பெரியோர் வாக்கு. தலையானது சரீரத்தின் மேல் பாகமாக அமைந்திருக்கிறது. மற்ற எல்லா உறுப்புக்களும் தலைக்குக் கீழே உள்ளன. ஆதலின் தலையே உயர்வுடையது.

2. மனித உடலை நேரே நடத்துவது தலையே. அதற்கு ஏதுவாக கண், வாய், மூக்கு, செவி ஆகிய நான்கு முக்கியமான உறுப்புக்களும் தலைப் பக்கத்தில் அமைந்திருக்கின்றன. நமது சரீரத்

3

திற்கு விளக்குப்போன்றது கண். நாம் நேரே வெளிச்சம் காணும்படி கண்கள் நெற்றியின் கீழ் வலது இடது புறங்களில் ஒவ்வொன்ருக நேர்த்தியாய் அமைந்திருக்கின்றன. கண் புருவங்களின் நடுவில் இருந்து ஆரம்பமாகிக், கண்களுக்குக்கீழ் குமிழ்போல் வடிவுடன் உயர்ந்து தோன்றுவது மூக்கு. முகத்தின் அழகைப் பெருக்குவதும் சுருக்குவதும் மூக்கின் அமைப்பே ஆகும். தவிர, நாம் உள் மூச்சு வாங்குவதும் வெளிமூச்சு விடுவதும் மூக்கினுலேயே. வெளிவாசனையை அறிவதும் உள் கோபத்தைச் சீறுவதும் மூக்கினுலேயே.

3. மூக்கின் கீழ், உதடுகளாகிய இதழ்களை உடையதாய் வாயானது தாமரை மலர்போல் செவ்வையாக அமைந்திருக்கிறது. வாயில்லாவிட்டால் மனிதர் ஒருவரோடு ஒருவர் பழக முடியாது. கல்வி கற்க முடியாது. வாயினுல் சிநேகத்தையும் பகையையும் கொள்ளலாம். எனவே வாயானது தலையால் ஆளப்படும்படி தலையோடு சேர்ந்திருக்கிறது. மனிதர்களோடு பழகுவதினுல் கேட்கலாகும் வார்த்தைகளைக் கேட்கச் செவிகள் உதவுகின்றன. இருபுறத்து வார்த்தைகளையும் இனிது கேட்கும்படி செவிகள் வலது இடது புறங்களில் நன்கு அமைந்திருக்கின்றன. சத்தம் எளிதில் உட்செல்லும்படி காதுகள் மடல்களோடு கூடி இருக்கின்றன.

---

# 6 தேவாலயம்

1. சர்வேசுவரன் உலகத்தையும் அதன் மனிதர்களையும் மற்றப் பொருட்கள் யாவையும் படைத்தார். படைத்ததும் அல்லாமல் யானை முதல் எறும்பு ஈருய் உள்ள எல்லா உயிர்களையும் காப்பவரும் அவரே. ஆகையால் சர்வேசுவரனைத் தொழுவது மிகவும் நல்லது.

2. நீதிபதி என்னும் ஓர் அரசன் இருந்தான். அவனுடைய மனைவியின் பெயர் குணசீலி. நீதி பதிக்கு வயது ஐம்பது; ஆயினும் பிள்ளை ஒன்றே னும் இல்லை. பிள்ளைக் கவலை அவனுடைய மன தைக் கொள்ளை கொண்டது. அதனுல் அவன் மதிமயங்கி இருக்கும் ஓர் நாளில், மிக்க மதிவாய்ந்த சந்நியாசி ஒருவர் அரமனைக்கு வந்தார்.

3. அரசன் சந்நியாசியின் பாதங்களைத் தொழுது பல பல உபசாரங்கள் செய்தான். அவ ரை ஓர் உயர்ந்த ஆசனத்தில் அமரச்செய்து, அரசன் அவருடைய பாதங்களின் அருகே உட் கார்ந்தான். பெரியவர் அரசனேடு வார்த்தை ஆடும் பொழுது அவனுடைய மனக்கவலையை நன்கு கண்டார். எனவே, அவர் அவனை நோக்கி, "வேந் தனே, நீ விரும்பும் புத்திர பாக்கியத்தை அடைய வேண்டுமானுல், ஆலயத்தில் தினந்தோறும் அவ

ரைப் பக்தியோடு தொழுது சேவிப்பாயாக அதை மன அடக்கத்தோடு மனமாரச்செய். நாற்பதுநாட்களுள் அதன் பயனைக் காண்பாய்" என்று சொல்லி அகன்றார்.

4. வேந்தன் முனிவர் சொன்னபடியே கனிந்த சிந்தையோடு கருத்துடன் கடவுளுக்குத் திருப்பணி செய்துவந்தான். நாற்பதாம் நாளில் கடவுள் அவனுக்குக் காட்சி அளித்தார். அரசன் அகங்களித்து நிற்க, ஆண்டவர் அவனை நோக்கி, "மன்னனே, இந்த உன்னத ரோஜாப்பூவை உன்மனைவிக்கு உண்ணக்கொடு. அவள் பத்தாம் மாதத்தில் பாலகனைப் பெறுவாள்" என்று கூறி மறைந்தார்.

5. நீதிபதி சர்வேசுரனைத் துதித்து நன்றி செலுத்தி வீடு வந்து சேர்ந்தான். அவ்வரிய பூவைத் தன் அன்பினுக்குரிய மனைவிக்கு உண்ணக் கொடுத்தான். கடவுளுடைய கிருபையினால் குணசீலி பத்தாம் மாதத்தில் ரோஜாப் புஷ்பத்தைப்போல் அழகிய ஒரு புத்திரனைப் பெற்றாள். அந்தக் குழந்தையின் பெற்றோரோடு அந்த நாட்டார் யாவரும் ஆனந்த மடைந்தனர். ஆகையால் "ஆலயம் தொழுவது சாலவும் நன்று" என்று அறிந்து, கடவுளைத் தொழுது களித்தார்கள்.

---

# 7 கல்பந்து விளையாட்டு

1. சிறுவர்களே, உங்களுக்கு விளையாட்டு என்றால் அதிகப் பிரியம் அல்லவா? விளையாடுவது நல்லதுதான். விளையாடாவிட்டால் தேகமானது திமிர் கொள்ளும். தேகத்தில் இரத்த ஓட்டம் வீரியமாய்ச் செல்லாது. உடல் சுறுசுறுப்பு அடையாது.

2. பந்துஎறிதல் ஒருநல்ல விளையாட்டு. இந்த ஆட்டம் ஆடுவதற்கு ஆறு அல்லது எட்டுப் பையன்கள் வேண்டும். அவர்கள் இரு சம பிரிவாகப் பிரிந்து கொள்ளவேண்டும்.

3. ஒரு நீண்ட கல்லை எடுத்து ஓர் சுவர் ஓரத்தில்நட்டி ஒரு பக்கத்தார் கல்லுக்கு அப்பால் சுமார் 20 காலடிகள் தூரத்தில் நில்லுங்கள். மறு பக்கத்தார் கல்லுக்கு சமீபத்தில் இரு கரையிலும் நிற்க. கல்லுக்குத் தூரத்தில் நிற்பவர்களில் ஒருவன் பந்தினால் மும்முறை கல்லை நோக்கி எறிக. அப்பந்து சுவர் ஓரத்தில் பட்டு, அரைக்குமேல் எழும்பினால் அடுத்தபக்கத்தாரில் ஒருவன் அதைப்பிடிக்க பந்து பிடிபட்டால், அதை எறிந்தவன் பட்டான் என்க. பின்னர் அப்பக்கத்தாரில் அடுத்தவன் பந்து எறிக.

4. பந்தானது கல்லை வீழ்த்தினால், எறியும் பக்கத்தார் தவிர, மற்றவர்கள் ஓடிவிடுக. எறியும் பக்கத்தார் தம்முள் ஒருவரின் மடியில் பந்தை ஒளிக்க. ஆயினும் ஒவ்வொருவனும் பந்தை உடையவன்

போல தைரியமாய் மறுபக்கத்தாரைத் துரத்துக. அப்பொழுது அடுத்த பக்கத்தார் பந்தை உடையவனைக் கண்டு அஞ்சி ஓடுங்கள். பந்தை உடையவன் அல்லாதவன் இவன் எனக்காணின், அவ்வனைப் பிடிக்கவாவது தொடவாவது முயல்க. பிடித்துக் கொண்டால், பிடித்தன் பக்கம் வெற்றி. பிடிபட்டவன் பக்கம் தோல்வி. அல்லது ஓடும் பக்கத்தார் அடுத்தவர் அறியாவண்ணம் கல்லைத்தொடப் பிரயாசப்படுதல்வேண்டும் தொட்டால் தொட்டவர் பக்கம்வெற்றி. தொடவிட்டவர் பக்கம்தோல்வி. பந்தைஉடையவனும்த் துரத்திச்சென்றவன் அப்பந்தினால் மறுபக்கத்தாரில் ஒருவனை எறிந்துவிட்டால், அவன் பக்கம் வெற்றி, எறிபட்டவன் பக்கம் தோல்வி. வெற்றியுற்றவர் மீண்டும் கல்லை நாட்டி முன்போல் எறிக.

---

## 8 பாவ புண்ணியப் பாட்டு

இராகம் - ஆனந்தக் களிப்பு.

1. பொய்சொல்லல் என்றுமே பாவம்—நல்ல
   மெய்தனைச் சொல்வதே மேலான புண்ணியம்.
2. சித்திரவதை செய்தல் பாவம்—தினம்
   பத்தியோ டுயிர்களைப் பேணுதல் புண்ணியம்.

3. அடுத்தாரைக் கெடுப்பது பாவம்—தருமம்
கொடுத்துப் பிறரை நீபோற்றுதல் புண்ணியம்
4. பெரியோர் சொல் கேளாமை பாவம்—உனக்கு
உரியோர்தம் உரைப்படி செல்வதே புண்ணியம்
5. கொலை பகை கோள் சூது பாவம்—தினம்
உலைவில்லா வேதத்தைக் கேட்பதே புண்ணியம்
6. கடவுளைந் தூஷித்தல் பாவம்—அவரின்
அடியார்தம் வழிபட்டு வாழ்வதே புண்ணியம்
7. ஆலயம் இகழ்வதும் பாவம்—பக்தி
சாலவே கடவுளைத் தொழுவது புண்ணியம்.

---

## 9. தபால்காரன்



மகன் தந்தையை நோக்கி,

"ஐயா, அதோ, வாசலண்டை ஒருவன் நிற்கிறான். அவன் தங்கள் பெயரைக் கூப்பிடுகிறான். அவனுக்குத் தங்களுடைய பெயர் எப்படித் தெரிந்தது" என்றான்.

தந்தை:—மகனே, அவன் தபால்காரன். அவன் நமக்குக் கடிதங்கள் கொண்டு வருவான். எனக்கு வந்த கடிதத்திலிருந்து, அவன் என் பெயரைத் தெரிந்து கொள்வான்.

மகன்:—ஐயா, அவன் எங்கே இருந்து கடிதங்கள் கொண்டு வருகிறுன். அவன் தன் கைகளில் பல கடிதங்களை வைத்திருக்கிறுனே. அவனுடைய தோளில் இருந்து ஒரு தோற் பை தொங்குகிறது. அதனுள் இருப்பது என்ன?

தந்தை:—இவன் தபால் ஆபீஸில் இருந்து வருகிறுன். ஒருவர் மற்றொருவருக்கு எழுதும் கடிதங்கள் யாவும் தபால் ஆபீஸ் மூலமாய் அந்தந்த கடிதங்களுக்கு உரியவர்களிடம் அனுப்பப்படும். அவைகளைத் தபால்காரன் எடுத்துக் கொண்டு வந்து தருவான்.

மகன்:—கடிதம் என்றுல் என்ன? அது எப்படி அனுப்பப்படுகிறது. நமது ஊரில் உள்ள தபால் ஆபீஸுக்கு எப்படிக் கடிதங்கள் வருகின்றன.

தந்தை:—மகனே, இதோ பார். எனக்கு ஒரு போஸ்ட்கார்டும் கவரும் வந்திருக்கின்றன. இது தான் போஸ்ட்காடு. இதன் விலை 9-பை இதன் ஒரு பக்கத்தில் செய்திகள் எழுதப்பட்டிருக்கின்றன. மறுபக்கத்தில் விலாசம் எழுதப்பட்டிருக்கின்றது. இதுதான் கவர். இதன் விலை $1\frac{1}{4}$-அணு. இதன் மேல் பக்கத்தில் என்னுடைய விலாசம் எழுதியிருக்கிறது. இதனுள் கடிதம் ஒன்று எழுதிவைக்கப்பட்டிருக்கிறது. கடிதம் எழுதப்பட்ட காகிதத்

தைக் கவருள் வைத்து, மேல் பரப்பில், மிக்கேல் பிள்ளை, ஷாப் வியாபாரம், நாங்குநேரி என்று எழுதித் தபால் பெட்டியுள் போட்டுவிட்டால், கவரானது கடிதின் நடந்து நமது ஊருக்கு வந்து, என் கையில் சேர்ந்துவிடுகிறது பார்.

மகன்:—ஐயா, கடிதம் நடந்து வந்து சேர்ந்து விடுமென்று சொல்கிறீர்களே, கடிதம் எவ்வாறு நடக்கும்?

தந்தை:—பிள்ளையே, இது பணகுடி மாமா எழுதியது. பணகுடியிலிருந்து நாங்குநேரி 14 மைல்கள். நேற்றுப் பணகுடித் தபால் பெட்டியில் கிடந்தது இக்கடிதம். அதைப் போஸ்ட் ரன்னர் மூலமாய்த் தபால் ஆபீஸ் அதிகாரி அனுப்பி வைத்தார். இன்று என் கையில் இருக்கிறது. இப்படியே ஒவ்வொரு ஆபீஸில் இருந்தும் கடிதங்கள் ரன்னர் மூலமாக மட்டுமல்ல, மோட்டார், ரெயில் வண்டிகள் மூலமாகவும் அனுப்பப்படுகின்றன.



மகன்:—ஐயா, தபால்காரன் வைத்திருக்கும் பைக்குள் கடிதங்கள்தாம் இருக்கின்றனவோ? கடிதங்களை நாம் நேரே தபால் ஆபீஸிலிருந்து பெற்றால் என்ன? இவன் வீடுவீடாய்த் திரிந்து கடிதம் கொடுத்துச் சிரமப்படுகிறானே.

தந்தை :—இவர் சர்க்காரால் இவ்வேலைக்கென்று நியமிக்கப்பட்டவர். நாம் எல்லோரும் கடிதங்களை நேரில் வாங்குவதென்றால் எப்போதும் சாத்தியப்படாது. அதற்காகவே இவர் தனியாக நியமிக்கப்பட்டுக் கடமை புரிகிறார். அதற்காக மாதச் சம்பளமும் பெறுகிறார். எனவே தபால் ஏற்பாட்டினால் இவருக்கும் லாபமே. நமக்கும் அதிக சௌகரியம் அன்றோ?

மகன் :—ஆம் ஐயா, தபால் ஏற்பாடு ஓர் சிறந்த ஏற்பாடுதான்.



## 10 அர்ச். லூசியான்

1. லூசியான் என்பவர் ஒருசிறந்த தேவபக்தர். இவர் சீரியா என்னும் தேசத்திலே பிறந்தவர்.

இவர் வாலிபனுய் இருந்தபோதே, இவருடைய தாய்தந்தையர் இறந்துபோனுர்கள். ஆனுல் அவர்கள் திரண்ட செல்வத்தைத் தம் புத்திரனுக்காகத் தேடி வைத்துப் போயினர்.

2. அர்ச். லூசியான் தனிப்பட வாழ்ந்து அச் செல்வங்களையெல்லாம் அநுபவிக்கஇஷ்டம்கொள்ளவில்லை. "தன் உயிரைப்போல் மன்னுயிரை எல்லாம் நேசிக்கவேண்டும். அறம் செய்தால் மோக்ஷத்தில் சிறப்புடன் வாழலாம். கிறீஸ்துவுக்காக உயிர் விடுவதே கீர்த்தி" என்ற உண்மைகளை அவர் அறிந்தார்.

3. ஆதலால் அவர் தமது ஏராளமான செல்வங்கள் எல்லாவற்றையும், தரித்திரர்க்குப் பகிர்ந்து கொடுத்தார். புண்ணியவாளனுன மக்காரியுஸ் என்பவருக்கு சீஷன் ஆனுர். அவரிடம் பல நல் உபதேசங்களைக் கேட்டார். வேத சாஸ்திரங்களை அல்லும் பகலும் படித்தார். ஒய்வு ஒழிவு இன்றிப் புண்ணிய கிரியைகளைப் புரிந்தார். வேதசாஸ்திரம் படித்து குருப்பட்டம் பெற்று வேதம் போதித்து வந்தார்.

4. அக்காலத்தில் கிறீஸ்துவ வேதத்தின் பொருட்டுக்கலகம்உண்டாயிற்று. கிறீஸ்தவர்களைப் புறமதத்தார் மிகவும் துன்பப்படுத்தினர். வேதத்தை மறுதலிக்கும்படி பலவந்தம் செய்தார்கள். அர்ச். லூசியானும் புறமதத்தாரின் கொடுமையில் சிக்

கினுர், அவர்கள் அவரைப் பிடித்துச் சிறையாக்கினுர்கள். அவருக்கு அன்னம் பானம் கொடுக்காமல் பட்டினியால் அவரை வருத்தினுர்கள். வேதத்தை மறுதலிக்கும்படி பயமுறுத்தினுர்கள். அதற்காக அவரைப் பலவிதமான உபாதைகளுக்கு உட்படுத்தினுர்கள்.

5. ஹுசியானே தாம்கொண்ட விசுவாசத்தில் இருந்து சிறிதேனும் விலகவில்லை. கிறீஸ்துவே மெய்யான கடவுள் என்று தைரியமாய்ச் சாட்சி கூறினுர். உடனே புறமதத்தார் அவரைப் பலவிதமாய் வதைசெய்து, கொல்லத் தொடங்கினுர்கள். ஆயினும், அவர் "கிறீஸ்துவேமெய்யான கடவுள். நான் அவரின் மெய்த்தொண்டன்" என்று சொல்லிக்கொண்டே மரித்தார்.

---

## 11 காகம்

1. காகம் மிகவும் சாதாரணமாகக் காணப்படும் ஓர் பக்ஷி. காகங்கள் நமது வீட்டுக் கூரைகள் மேலும், கொல்லைப் புறத்து மரங்கள் மேலும் உட்கார்ந்து, கா, கா, என்று கரையும். பலகாரக் கடைகள், சாப்பாட்டுக் கடைகள் முதலியவற்றின் அருகிலும் காகங்களை அடிக்கடி காணலாம்.

2. காகம் மரங்களில் வசித்துக் கூடுகட்டி முட்டைகள் இட்டுக் குஞ்சுகள் பொரித்து வாழும்.



இந்த மரத்தின் கிளைகளின் நடுவில் காகம் ஒன்று கூடுகட்டி வாழ்வதைப் பார். ஆண்காகம் கூட்டின் அருகில் உள்ள கிளையின் மேல் உட்கார்ந்திருக்கிறது. பெண்காகம் இப்பொழுது தான் முட்டையிட்டு வெளியே வந்திருக்கிறது. கூட்டில் முட்டையிருக்கிறது பார். முட்டையிலிருந்து குஞ்சுகள் பொரிக்கும்.

3. காகம் மிகவும் துணிகரமான பக்ஷி. இந்தப் படத்தில் உள்ள காகத்தைப் பார். அது தன் வாயில் ஓர் வடையை வைத்திருக்கிறது. அதற்கு வடை எப்படி கிடைத்தது? பலகாரக் கடைக்காரன் பலகாரம் சுடுவதற்காக அடுப்பின் அண்-

டையில் ஆத்திரமாய் இருந்தான். அப்பொழுது இது தட்டில் இருந்த ஓர் வடையைச் சட்டென்று தூக்கிக்கொண்டு பட்டெனப் பறந்து விட்டது.

4. காகங்கள் பூச்சி புழுக்களையும் அழுகிய வஸ்துக்களையும் உண்ணும். காகங்கள் இல்லாவிட்டால் இந்த அசுத்தப் பொருட்களின் நாற்றம் ஆகாயம் எல்லாம் வீசும் அல்லவா? அசுத்தங்களை அகற்றுகின்றனபடியால் காகத்தை 'ஆகாயத் தோட்டி' என்று அழைக்கிறார்கள்.

5. காகங்கள் பல சமயங்களில் கூட்டங் கூட்டமாகக் காணப்படும். அதனால் அவைகள் ஒற்றுமை உடையன என நாம் அறிதல்வேண்டும். பொழுது விடிந்தவுடனே நாம் காகங்கள் கரைவதைக் கேட்கிறோமே. சில சமயங்களில் நாம்படுக்கையில் இருக்கும் போதே அதைக் கேட்கிறோம். அதிகாலையில் படுக்கையை விட்டு எழும்புதல் காகத்தினிடத்தில் காணப்படும் நல்லகுணமாகும். அது போல மாணவர்கள் காலையில் எழுந்து தம்கடமைகளைச் சுறுசுறுப்புடன் ஆரம்பிக்கவேண்டும்.

---

## 12 'நீர் ஆடுதல்'

தங்கன்:—பொன்னு, தெப்பக்குளத்தின் வடமேற்கு மூலையில் காகம் ஒன்று குளிக்கிறதைக் கண்டாயா?

பொன்னன்:—ஆமாம், நான் அநேக முறை கள் பார்த்திருக்கிறேன். காகம் மட்டுமோ? அதோ பார், ஒரு மைனுவும் குளிக்கிறது.



தங்கன்:—இவைகள் ஏன் நீராடுகின்றன? நீராடலினுல் இவை என்ன பயனை அடைகிறது.

பொன்னன்:—நீர் ஆடலின் பயனை நீர் ஆடியே கண்டுகொண்டன? தெப்பக்குளத்தில் குளிப்பது என்ருல் தினந்தோறும் முப்பொழுதும் நான் குளிக்க விரும்புவேன். தங்கா, நீ நேற்று குளித்தாயா?

தங்கன்:—இல்லை. நேற்று நீ என்னை அழைக்கவில்லை. நான் நல்லது என்று சும்மா இருந்துவிட்டேன்.

பொன்னன்:—நல்லது என்ரு இருந்துவிட்டாய்! உன் புத்தி வெகு நன்று. குளிப்பின் நன்மை

யையும் குளியாமையின் தீமையையும் நீ அறிய வில்லை போலும்.

நமது சரீரத்தின் மேல்தோலானது சின்னஞ் சிறிய துவாரங்களை உடையது. அவைகளில் இரு ந்து வியர்வை என்னும் கழிவு நீர் எப்போதும் வெளிப்படும். அந்த நீரோடு, வெளிப்புறத்து அழுக்குகள்தோலோடு ஒட்டிக்கொள்ளும். உடனே வியர்வையும்நாற்றமும் அசுத்தமும்தேகத்தில் இரு ந்து கமழும். அதை நீராடிப் போக்குதல் வேண் டும். அப்படியானல் தோலின் அணுத்துவாரங் கள் வழியாய் இரத்தம் ஓட்டம் மேற்புறம்வரை தடையின்றிப் பாயும். தோலானது புண், சிறங்கு, அழுக்கூறு முதலியன இல்லாமல் சுத்தமாய்க் காக் கப்படும்.

தங்கன்:—பொன்னு, நான் இன்றுதான் நீரா டலின் பயனை அறிந்தேன். சரி. நாம் இன்று தெப்பக்குளத்தில் நன்ருகக் குளிப்போம் வா.

(இருவரும் குளிக்கிருர்கள்)

சுத்தம் சுகம் தரும்.

---

## 13 வீடுகள்

1. சூரியன் கடுமையாய் வெயில் காய் கிறது. அப்பொழுது வெயிலில் நடந்து செல்லும்

ஒருவன் நிழலில் தங்க ஆசைப்படுவான் அல்லவா ? திடீரெனப் பலத்த காற்று அடித்தால் நாம்



ஒதுங்கும் இடம் தேடிச் செல்வோம் அல்லவா ? பெரிய மழை பெய்தால் நாம் தெருவில் நனைந்து கொண்டு நிற்போமா ? உடனே நமது சொந்த வீட்டிற்குச் செல்வோம் அன்றோ ?

2. வீடு ஒன்று இருப்பதன் அவசியம் நமக்கு நன்கு தெரிகிறது. நாம் நமது வீட்டின் இடத்தே இருந்து உண்ணுகிறோம். உறங்குகிறோம். நமது அகத்தில் இருந்தே நாம் சந்தோஷமாய் ஆடுகிறோம், பாடுகிறோம். மழை அடித்தாலும், வெயில் எரித்தாலும் நாம் வீட்டினுள் எல்லா வசதிகளுடன் சௌக்கியமாய் வாழுகிறோம்.

3. நாம் எங்குச் சென்றாலும், கடைசியில் நமது அகமே வந்து அமர்கின்றோம். நாம்

நம்மைவிடப் பணக்காரர் வீட்டிற்கு விருந்தாகச் சென்றிருந்தாலும், மூன்று நாட்களுக்குள் அவ்வி ருந்தும் மருந்தாகிவிடும். வேற்று இல்லம் நமக்கு வேண்டிய சுகம் தராது. உடனே நாம் நமது சொந்த வீட்டை நோக்கியே விரைவுடன் செல் வோம். சொந்த வீடே சுகம் தரும். தாய் வீடே தங்க வீடு. என்னே வீட்டின் சுகம்!

4. பணக்காரர் பெரிய மெத்தை வீடுகளில் வசிப்பார்கள். பல வீடுகளை உடையவர்களாய் இருப்பார்கள். ஏழைகள் சிறிய குடிசைகளில் வசிப்பர். சிலர் வாடகை வீடுகளில் குடி இருப்பர். பிரபுக்கள் மாளிகைகளில் வசிப்பர். மன்னர் அரண் மனையில் வாழ்வர். இங்ஙனம் பலவகை வீடுகளை உடையது ஊர் என்னப்படும்.

---

## 14 தென்னை

இப்படத்தில் காணப்படும் தென்னை மரங்களை எட்டிப்பார். ஒரு தென்னைமரம் வலது புறமாய்ச் சாய்ந்து கோணலாயும் உயரமாகவும் வளர்ந்திருக் கிறது. ஒன்று இடதுபுறமாய்ச் சாய்ந்து கோணிக் கோணி வளர்ந்திருக்கிறது. நடுவில் நிற்கும் தென்னை ஒருவாறு சாய்ந்தும் ஒருவாறு சாயாம லும் கோணல் உடையதாய் நீண்டு வளர்ந்திருக்

கிறது. மூன்றில் ஒன்ருவது கோணுமல் இல்லை. ஆகையால் 'கோணுத தென்னைமரம் கண்டவன்



உண்டோ' என்று ஜனங்கள் அடிக்கடி கூறுவார்கள்.

2. நாம் தென்னைமரங்களை உண்டாக்குவது எதற்காக? தென்னைமரத்து மட்டைகளின் ஊடே குலைகள் தொங்குகின்றன. அந்தக் குலைகளைவெட்டி இறக்கினுல் முற்றியும் முற்ருமலும் இருக்கிற பல காய்களைக் காணலாம்.

3. முற்ருத காய் இளநீர் என்னப்படும். அது பச்சைப்பசேலென்று நீர் நிரம்பியதாய்

இருக்கும். மிக்க வெப்பமான வேளையில் இளநீர் தாகத்தைச் செப்பமாய்த் தணிக்கும்.



இளநீர்ப் படம்   முற்றின தேங்காய்   நார் உரித்த தேங்காய்

4. முற்றிய காய்க்குத் தேங்காய் என்று பெயர். அது பழுப்பு நிறத்தில் திண்ணமான நார் கொண்டது. நாரை உரித்தால் தேங்காய் உருண்டையாய்த் தென்படும். தேங்காயின் மேற்றோடு கொட்டாங்கச்சி எனப்படும். அதை உடைத்துப் பார்ப்பின் வெண்மையான பருப்பு காணப்படும். அந்தப் பருப்பு பலகாரவகைக்குச் சாலவும் பயன்படும். முற்றின தேங்காயில் நீர் அதிகம் இராது.

5. தேங்காயை வெயிலில் உலர்த்திப் பருப்பைச் செக்கில் இட்டு ஆட்டி எண்ணெய் எடுப்பார்கள். தேங்காய்எண்ணெய் விளக்கு எரிப்பதற்கும் தலையில் தேய்ப்பதற்கும் உதவும்.

6. தென்னை ஓலையால் கூடைகள் செய்யலாம் ; தடுக்குகள் பின்னலாம். அந்தத் தடுக்குகள்

பந்தல் வேய்வதற்கு ஆகும். தென்னையின் மட்டைகள் பந்தல்களில் வரிச்சிகட்ட உதவும். தேங்காயின் நாரினல் கயிறுகள் திரிப்பார்கள். ஓலையின் ஈக்கினல் துடைப்பம் செய்வார்கள். தென்னையின் ஒவ்வொரு உறுப்பும் மனிதர்களுக்கு மிகவும்பயன் படுகிறது.



## 15 அர்ச். பிரான்ஸிஸ் சவரியார்

1. அர்ச். சவரியார் ஸ்பெயின் தேசத்தில் சவரிக்கோட்டை என்னும் ஊரில் பிறந்தார். இவர் பாரிஸ் நகரிலிலுள்ள பெரிய கலாசாலையில்

கல்வி கற்று வந்தார். அக்கலாசாலேயிலேயே ஓர் பெரிய உபாத்தியாயராக வேலே பார்த்து வந்தார். இப்படி இருக்கும்பொழுது அவர் அர்ச். இன்ஞசியார் என்னும் ஓர் சந்நியாசியாரை அடிக்கடி தரிசிக்க நேர்ந்தது.

2. அர்ச். இன்ஞசியார் மிகவும் பரிசுத்தமான குணங்கள் உடையவர். சர்வேசுரனேப் பக்தியோடு நாளும் வழிபடுபவர். அவர் அர்ச். சவரியாரைப் பலதடவை சந்தித்தார். சந்தித்தபொழுது எல்லாம் அவர் அர்ச். சவரியாருக்குப் பல நல்உபதேசங்கள் சொன்னூர். "உபாத்தியாயர்வேலே பெரிது அல்ல, அதனுல் கீர்த்தி அடைவது சிறந்ததல்ல. ஆத்தும ஆதாயம் செய்வதே மிகவும் உத்தமம் உள்ளது" என்று உரைத்தார்.

3. அர்ச். சவரியார் அந்தத் திருஉபதேசங்களேச்சிந்தையில் ஏற்ருர். உடனே அவர் தமது உபாத்தியாயர் வேலேயை விட்டார். சேசு சபையில் சேர்ந்து குருவானுர். பிறகு அவர் இந்தியாவாகிய நமது தேசத்திற்கு வந்தார். கடற்கரைத் துறைமுகங்களில் எல்லாம் இறங்கி, மெய்யான கடவுளேக் குறித்துப் பிரசங்கம் செய்தார். அவருடைய சிறந்த யோசனேயைக் கேட்ட அநேகர் கிறிஸ்தவர்கள் ஆனுர்கள்.

4. கடைசியாக அவர் சைஞ தேசத்திற்கு வேதத்தைப் போதிக்கும்படியாகச் சென்ருர்.

ஆனால் அவர் வழியில் கப்பலில் இறந்துபோனார். சைனதேசத்திலுள்ள சாங்கை என்னும் தீவில் அவருடைய சரீரம் அடக்கம் செய்யப்பட்டது. பிற்பாடு அவருடைய சரீரம் இந்தியாவுக்குக் கொண்டுவரப்பட்டுக் கோவையில் அடக்கம் செய்யப் பட்டது. அந்தபரிசுத்த சடலம் இன்னமும் அழியாமல் இருக்கிறது.

---

## 16. நமது சரீர அமைப்பு

1. பிள்ளைகளே, நமது சரீர உறுப்புகளைப்பற்றி ஒரு சிறிது படித்திருக்கின்றீர்கள் அன்றோ? நமது தலையே உடலை நடத்துவதென்று முன்பு வாசித்தீர்கள். வாய், கண், மூக்கு, செவி இந்நான்கு உறுப்புகளோடு, வயிறு, கைகள், கால்கள், விரல்கள் முதலிய உறுப்புகளையும் உற்று நோக்குங்கள்.



2. நமது கைகளை அழுத்தினால் அதனுள்ளே கடினமான பொருளொன்று தென்படுகிறதல்லவா? அது எலும்பு. நமது மேல்

புயங்களைத் தொட்டுப்பார்த்தால், உள்ளே இருக்கும் எலும்பும் வெளியே உள்ள சதையும் நமக்குப் புலப்படும். நமது சரீரத்தில் எலும்புகள் இல்லாவிட்டால் என்ன ஆகும்? நாம் நன்றாய் ஓட முடியுமா? விரைவாய் நடக்க முடியுமா? கை கால்களை நன்கு மடக்க முடியுமா? விரல்களை வளைத்து எழுத முடியுமா? எனவே நமது சரீரம் எலும்பினால் உறுதியுள்ளதோர் ஸ்திதியைப் பெற்று ஜீவிக்கிறது.

3. இனி, நமது சதைகளினால் பிரயோஜனம் என்ன என்று நீங்கள் கேட்கலாம். தசையில்லாதவன் என்று அர்த்தம். நமக்கு முன் யோசனையும் புத்தியும் தருவது நமது தலை உள்ளிருக்கும் மூளையே. ஆகையால் கடவுள் அதை மண்டை ஓடாகிய எலும்புப் பெட்டிக்குள் பத்திரமாய் வைத்திருக்கிறார். மூளையின் சக்தியைப் பாராட்டியே 'எண் சாண் உடம்பிற்குச் சிரசே பிரதானம்' என்பார்கள்.

4. பிள்ளைகளே, சிவப்பான ஜலபதார்த்தமொன்று நமது தேகத்திலிருந்து வடிவதைச் சில சமயங்களில் பார்த்திருக்கிறோம். பாலன் அன்று பென்சில் சீவும்பொழுது கத்தியினால் விரலில் சிறிது அறுத்துக் கொண்டான். உடனே வந்தது

அந்தச் சிவந்த பொருள். அதுதான் ரத்தம் எனப் படும். அது நாம் உண்ணும் ஆகாரத்தின் சத்து. அதுவே நமது உடலின் எல்லா உறுப்புக்களையும் போஷிக்கிறது. நல்ல ரத்தம் ஊறவேண்டுமானல் நாம் நல்ல சத்துள்ள ஆகாரங்களைச் சாப்பிட வேண்டும். அழுகின பழங்களையும், கெட்டுப்போன உணவுகளையும் உண்ணலாகாது.

5. நார்கள் நமது எலும்புகளைச் சுற்றிலும் நன்கு ஒட்டிக் கொண்டிருக்கின்றன. எலும்புகள் மடங்கும் இடங்களில் எல்லா தசைகளும் மடங்குகின்றன. எலும்புகள் நிமிரும் இடங்களில் எல்லா தசைநார்களும் நிமிர்கின்றன. நமது தேகத்தில் எலும்புமட்டுமன்றித் தசைநார்களே இல்லாவிடில் எவ்வாறு இருக்கும் என்று யோசியுங்கள். தசைகளே இல்லாவிட்டால் எலும்புகள் ஒன்ருேடொன்று உராவிக்கொள்ளும். அவைகள் தம் தம் இடங்களைவிட்டு அகன்ருவது நெருங்கியாவது விழும். அதனல் எலும்புகள் தேய்ந்தும் எளிதில் ஒடிந்தும் போம். தவிர, தசைகளே நமது தேகத்திற்கு அழகையும் நல்ல ரூபத்தையும் தருகிறது.

6. எல்லாவற்றிற்கும் சிறப்பாகத் தலையில் உள்ளே இருக்கும் ஒரு வஸ்து நமது சரீரத்திற்கு

மிகவும் உபயோகமானது அது நமது மூளை. பாடம் படிக்காத பையன்களை 'மூளையில்லாதவன்' என்று ஆசிரியரில் சிலர் சில சமயங்களில் சொல்வதுண்டு. ஆனால் மூளையில்லாதவன் ஒருவனும் இல்லை. 'மூளையில்லாதவன்' என்றால் புத்தி இல்லாதவன்.



## 17 நெருப்பின் குணம்

1. ஓர் கரிய வண்டு எரிவிளக்கை மஞ்சள் நிறப் பூஎன மதித்தது. பகலில் பூக்கள்தோறும் சென்று தேன் எடுக்கும் அந்த வண்டு இரவில் மலர்ந்து காணப்பட்ட தீபத்திலும் தேன் எடுக்கப் போயிற்று. வண்டு விளக்கின் அருகில் வந்தது. தீபச்சுடர் அதன் கண்களுக்கு அழகாய்க் காணப்பட்டது. அது ஒரு சிம்னி உள்ள விளக்கு. சிம்

னிக்குள்ளே தெரிந்த சுடரை மஞ்சள் பூஎன மயங்கிய வண்டு, விரைவுடன் பறந்து, இரண்டு மூன்று முறைகள் சிம்னியைத் தாக்கினது. அந்தோ! அவ்வண்டு செத்துவீழ்ந்தது. அதை எடுத்துப் பார்க்க அதன் இறகுகள் கரிந்து காணப்பட்டன. அதன் உடல் எல்லாம் சூடாயிருந்தது. தீயைத் தீண்டின படியால் அது சூடுண்டு செத்துப்போயிற்று.

2. தீயானது நம்மையும் கொல்லக்கூடிய அளவில் சூடு உள்ளது; ஆயினும் அதனுல் பெரிய பயன் உண்டு. அரிசியைச் சோருகச் சமைப்பதும் தீ. பலகாரம் செய்யப் பயன்படுவதும் தீ. தீ இல்லாமல் விளக்கு இல்லை. தீ இல்லாமல் நமக்கு வெளிச்சமும் இல்லை.

3. அக்கினி கடவுளால் நமக்கு அருளப்பட்ட ஓர் அரிய ஈவு. அதை நாம் தகுந்தவண்ணம் உபயோகித்தால் சாலவும் பயன்உண்டு. தகாத வண்ணம் உபயோகித்தால் சாலவும் தீமை உண்டு

4. ஆகையால் தீயின் விஷயத்தில் நாம் ஜாக்கிரதை உள்ளவர்களாய் இருத்தல் வேண்டும். சிறுவர்கள் நெருப்புக் கோலைக் கையில் எடுத்து விளையாடக் கூடாது. விளக்கைக் கொளுத்திக் கட்டிலின் கீழாவது வஸ்திரங்களின் பக்கத்திலாவது வைத்தல் கூடாது. சில சமயங்களில் அஜாக்கிரதையால் அநேக குடிசைகள் எரிந்துவிடுகின்றன.

5. நெருப்பைப் பத்திரமாய் அடக்கி இருப்பது நெருப்புப் பெட்டி. நெருப்புப் பெட்டியில் உள்ள குச்சுகளில் நெருப்பானது அடங்கி இருக்கிறது. அக்குச்சைப் பெட்டியின் ஓரத்தில் உராவினுல் நெருப்பு உண்டாகும். கால் அணுவிற்கு இரண்டு நெருப்புப் பெட்டிகள் வாங்கலாம். கடையில்பழைய காலத்தில் நமதுமுன்னேர்கள் சக்கிமுக்கி கற்களைத் தேய்த்து நெருப்புப் பற்ற வைத்தார்கள். ஆனுல் இக்காலத்தில் நெருப்பு கிடைப்பது வெகு எளிது.

---

## 18 கதைப்பாட்டு.

### மதியற்ற மாப்பிள்ளை

இராகம்-இங்கிலீஷ்.

1. மூடமாப்பிள்ளை யொருவன்
 மோடியாகப் பயணம்செய்து
நாடரு மாமியார் அகத்தில்
 நல்விருந்தாகப் போய்ச் சேர்ந்தான்.

2. பட்டிக்காட்டு மாப்பிள்ளையாம்
 பகலின் வெளிச்சமே கண்டவனும்
முட்டி இடறும் இரவுகளில்
 முழுதும் இருட்டிலே வாழ்ந்தவனும்.

3. விளக்கு என்பதைப் பார்த்தறியான்
 விண்சுடர் அன்றி வேறறியான்
விளக்கொன்று எரிதலை விருந்தகத்தில்
 விரும்பிப் பார்த்து அதிசயித்தான்.

4. என்னே! மாமியார் இதுவே
 இனிய வெளிச்சம் தருகின்றதே
என்று கேட்ட மாப்பிள்ளைக்கு
 இதுதான் சூரியன் குஞ்சென்ருள்.

5. அது சொல் கேட்டவன் மனமகிழ்ந்து
அதனைத் திருட எண்ணி விட்டான்
மெதுவாய் எழுந்தான் உறங்குகையில்
மெல்லென எடுத்தான் எரி விளக்கை.

6. விளக்கை எடுத்தவன் வீட்டுச் சுவர்
மேலே ஓலைக் கூரையின் கீழ்
இலங்க வைத்துப் படுத்துக் கொண்டான்
இரண்டு நாழிகை நடந்தவுடன்

7. தீயோ தீ, தீ, தீயோ வென்று
தெருவின் ஜனங்கள் கூச்சலிட
தீயால் அவ்வகம் எரிந்த பின்பே
தீயும் அமர்ந்து தணிந்ததுவே.

8. காலை சூரியன் தோன்றுதலும்
கவலை கொண்ட மாமியார்தன்
கரிந்த வீட்டுக் குப்பையெல்லாம்
காசுக்காகக் கிண்டலானாள்.

9. அக்காலை மூட மாப்பிள்ளையும்
பக்குவமாகத் தான்வைத்த
தக்க சூரியன் குஞ்சதனைப்
பக்கம் எங்கும் பார்த்தலைந்தான்

10. ஐயா மதியுள்ள மருமகரே
மெய்யாய் நீர்தேடும் பொருள் என்னே ?
வெய்ய தீயால் வெந்ததென்று
வையாதிரும் நீர் மனவருத்தம்.

11. என்ற மாமியார் தமக்கு
நன்றே வாய்த்த மருமகனும்
நின்று ஜொலிக்கும் சூரியன் குஞ்சை
நேற்றுக் கூரைச் சுவர்மேலே.

12. வைத்தேன் இன்றே எடுத்தேக
அத்தை காணேம் அதை என்றான்
இத்துணை மருமகன் இருந்தக்கால்
மெத்தவும் வாழலாம் 'மிதி' என்றாள்.

13. பைத்தியக்கார மாப்பிள்ளையும்
பதறி அகன்றான் ஓட்டத்தினில்
புத்தியற்ற மருமகனால்
போந்த புண்ணியம் பார்த்தீரா ?

---

## 19 நல் வீடு

1. மிகவும் சிநேகிதர் ஆன இரண்டு பெண்கள் ஓர் ஊரில் வசித்தார்கள். அவர்களில் ஒருத்தியின் பெயர் மார்த்தாள். அடுத்தவள் பெயர் மரியாள். ஒரு நாள் மார்த்தாள் தன் சிநேகிதியைப் பார்க்கப் போனாள். மரியாள் மார்த்தாளைக் கண்டதும் மிகவும் சந்தோஷம் அடைந்தாள். ஆனால் கொஞ்ச நேரத்திற்குள் மரியாள் மார்த்தாள் உடைய முகம் துக்கத்தால் வாட்டம் உற்றிருந்ததை உணர்ந்தாள். ஆகையால் அவள், "என் பிரிய மார்த்தாளே, உன் முகம் வாடி இருப்பது ஏன் ? உனக்கு என்ன கவலை ?" என்று கேட்டாள்.

2. அப்பொழுது மார்த்தாள், "என் பிரிய மரியாளே, எனக்கும் என் பிள்ளைகளுக்கும் எப்பொழுதும் ஜுரம் உண்டாகிறது. இன்று என் இளைய

மகன் ஜுரத்தால் மிகவும் வருத்தமான நிலைமை யில் இருக்கிறான்'' என்றாள். உடனே மரியாள் தன் சிநேகிதி வீட்டிற்குப் புறப்பட்டுப் போனாள்.

3. மரியாள் மார்த்தாளுடைய வீட்டில் நுழைந்ததும் வியாதியாய்க்கிடந்த சிறுவனைப் பார்த்தாள். அதன்மேல் அந்த வீட்டின் நாலா பக்கங்களையும் நன்கு சுற்றிப் பார்த்தாள். பிறகு அவள் மார்த்தாளை நோக்கி, 'என் பிரிய சிநேகிதியே, உன் வீடு இருப்பது மிகவும் பள்ளமான ஓர் இடம். உன் வீட்டுத் தளவரிசையும் மிகத் தாழ்ந்தது. மழை காலத்தில் உன் வீட்டைச் சுற்றிலும் ஜலம் கட்டி நிற்கிறது. அதனால் வீடு முழுவதும் ஈரமாகத் தோன்றுகிறது. தவிர, போதுமான ஜன்னல்கள் இல்லை. ஆகையால் சுத்தமான காற்று வர வழி இல்லை. இந்த வீட்டில் இனிமேல் கணமேனும் குடியிருத்தல் கூடாது. உடனே நீ வேறு வீடு செல்லவேண்டும். உன் சிறுவர்கள் இங்கே இருந்து சுகமாய் வாழ முடியாது' என்று, சொல்லிப் போனாள்.

4. மார்த்தாள் மரியாள் சொன்னபடியே வேறு வீடு புகுந்தாள். அவ்வீடு அவள் சொன்னபடி சுகத்துக்கு ஏதுவான எல்லா நல்ல தன்மைகளையும் பொருந்தி யிருந்தது. ஆதலால் அவள் அங்கே தன் மக்களோடு சுகமாகக் காலங்கழித்து வந்தாள்.



## 20 கெட்ட குமாரன் கதை

1. ஒரு மனிதனுக்கு இரண்டு குமாரர் இருந்தனர். அவர்களில் இளையவன் தன் பிதாவை நோக்கித் "தகப்பனே எனக்கு உரிய எல்லா ஆஸ்திகளையும் பகிர்ந்து தரவேண்டும்" என்றான். பிதாவானவன் அப்படியே செய்தான். உடனே இளையவன் எல்லா ஆஸ்திகளோடும் தூரதேசத் திற்குப் புறப்பட்டான். அவனுடைய கெட்ட தோழர்கள் யாவரும் அவனோடு கூடிச் சென்றார் கள். அங்கே கெட்ட வழிகளில் தன் பணத்தைச் செலவழித்தான். ஆதலால், அவன் தரித்திரன் ஆனான். அப்பொழுது அவனுடைய கெட்டதோ ழர்கள் யாவரும் அவனை விட்டு அகன்றனர்.

2. பிறகு கெட்ட குமாரன் வயிற்றுப் பிழைப்புக்கு வழி காணுது திகைத்தான். கடைசியில் அவன் ஓர் குடியானவனுக்குப் பன்றி மேய்க்கும் கூலிக்காரன் ஆனுன். பிறகு பன்றிகள் தின்னும் தவிடுகூடக் கிடையாமல் சஞ்சலம் அடைந்தான்.

3. ஒருநாள் அவன் பசியினுல் வருந்தின பொழுது தன் தகப்பன் வீட்டைப் பற்றி நினைத்தான். "ஐயோ, என் தகப்பன் வீட்டில் எத்தனையோ வேலைக்காரர்களுக்கு நித்தமும் நல் உணவு கிடைக்கிறதே. நான் என் பிதாவின் இடமே செல்வேன்" என்று சொல்லி, வீட்டை நோக்கி விரைந்து போனுன்.

4. வெகு தூரத்தில் தன் மகனைக் கண்ட தகப்பன் எழுந்து ஓடி அவனுடைய கழுத்தைக் கட்டி முத்தம் செய்தான். அப்பொழுது கெட்ட குமாரன் தன் பிதாவைப் பார்த்து, "பிதாவே, சர்வேசுரனுக்கு விரோதமாகவும் உமக்கு விரோதமாகவும் பாவம் செய்தேன். என்னை ஒரு வேலைக்காரன் ஆகவாவது ஏற்றுக்கொள்ளும்!" என்றுன். அது கேட்ட பிதா ஆனந்தம் கொண்டு, "நீ என் அருமைப் புதல்வன். நீ காணுமற்போனுய், திரும்பவும் காணப்பட்டாய்" என்று சொல்லி, அவனை ஏற்றுக்கொண்டான். இது போலவே, கெட்ட பிள்ளைகள் நல்ல பிள்ளைகள் ஆகும் பொழுது கடவுள் அவர்களை மிகச் சந்தோஷத்தோடு ஏற்றுக்கொள்வார்.



## 21 மோட்டார் வண்டி

1. மோட்டார் வண்டியை நாம் வெகு சாதாரணமாகக் காண்கின்றோம். தற்காலம் பெரிய ரோடுகளில் எல்லாம் மோட்டார் வண்டிகள் ஓடுகின்றன. ஜனங்கள் மோட்டார் வண்டிகளின் மூலமாய் ஒரு ஊரிலிருந்து மற்றொரு ஊருக்குப் பிரயாணம் செய்கிறார்கள். பிரயாணம் செய்வதற்கு மோட்டார் வண்டிகள் மிகவும் வசதி உள்ளன. ஏனென்றால் மோட்டார் வண்டி மிகவும் விரைவாக ஓடும்.

2. முன் காலத்தில் நமது நாட்டுப் புறத்து ஜனங்கள் மாட்டு வண்டிகள் மூலமாகவே பிரயாணம் செய்தனர். அதன்பின் குதிரை வண்டிகள் தோன்றின. ஆனால் இக்காலத்தில் மாட்டு வண்டிகள் மூலமாகவும் குதிரை வண்டிகள் மூலமாகவும் பிரயாணம் செய்கிறவர்கள் மிகவும் சிலரே. மோட்டார் வண்டிகள் அதிகமாய் விட்டபடியால் மாட்டு வண்டிகளும் குதிரை வண்டிகளும் பல மறைந்து போயின.

3. மோட்டார் வண்டி மிகவும் அதிசயம் வாய்ந்ததே. உலகத்தில் உள்ள அநேக அதிசயங்களில் மோட்டார் வண்டியும் ஒன்று எனச் சொல்லலாம். மோட்டார் வண்டி கரடு முரடான ரோட்டின் மேல் பாய்ந்து ஓடுவதைப் பார்ப்பது வெகு ஆச்சரியமாய் இல்லையா?

4. மோட்டார் வண்டி பெரும்பாலும் இரும்பாலும் உருக்கினாலும் செய்யப்படும். அதன் நான்கு சக்கரங்களும் ரப்பர் குழாய்களால் பொதியப்பெற்று இருக்கின்றன. மோட்டார் வண்டி மண் எண்ணெயின் உதவியால் ஓடுகிறது. தண்ணீரும் அதற்குத் தேவையானதே.

5. பெரிய மனிதர்கள் யாவரும் ஒவ்வொரு மோட்டார் வண்டியைச் சாதாரண உபயோகத்திற்காகவும் வாங்கிக்கொள்கிறார்கள். சொந்த மோட்டார் ஒன்று இருந்தால் எந்த இடமும் விரைவில் போய்வரலாம்.



## 22 இந்திய நாணயங்கள்

1. ஒரு ஊரில் சந்நியாசி ஒருவன் இருந்தான். அவனுடைய மனதில் பண ஆசை இருந்தது. ஆகையால் அவன் பிச்சைக்காரன்போல வீடு வீடாய்ச்சென்று யாசகம் வாங்கினான். சந்நியாசி

யைக் கண்டவுடனே ஜனங்கள் தங்களால் கூடிய தர்மம் கொடுத்தார்கள். சீக்கிரத்தில் சந்நியாசி பல பணப் பைகளை உடையவன் ஆனான். அவன் இந்த பணப் பைகளை அடிக்கடி திறந்து பார்த்து ஆனந்தம் அடைவான்.

2. ஒருநாள் சந்நியாசி ஒரு ஆலமர நிழலில் இருந்து தன் பணப்பைகளை ஒவ்வொன்றாக திறந்தான். ஒரு பையில் நிறைய தம்பிடிகளாய் இருந்தது, தம்பிடியைக் காசு என்றும் பை என்றும் சொல்வார்கள். அது செம்பினால் செய்யப்பட்டது. மற்றொரு பையில் நிரம்பவும் கால் அணக்கள் இருந்தன. அதுவும் செம்பினால் செய்யப்படும் ஒரு நாணயம். அது தம்பிடியைப்போல வட்டமாய் இருக்கும். மூன்று தம்பிடி கொண்டது ஒரு காலணா.







3. சந்நியாசி மூன்றாவது பையைத் திறந்தான். அதில் முழுவதும் அணக்கள் இருந்தன. அண நிக்கலால் செய்யப்படும் நாணயம். அது வட்டமாய் இருந்தாலும் வளைவான ஓரம் உடையது. நான்கு காலணக்கள் கொண்டது ஒரு அண. ஒரு அணவுக்கு 12 பை அல்லது நான்கு காலண.

4. நான்காவது பையைத் திறக்க அதில் 2 அணுக்கள் வெள்ளி நாணயமாகவும் நிக்கல்



நாணயமாகவும் காணப்பட்டன. நிக்கல் இரண்டணு சதுரமாயும் கோணங்கள் உருட்டப்பெற்றதாயும் இருந்தது. வெள்ளி நாணயங்களில் மிகச் சிறியது இரண்டு அணுதான். இரண்டு அணுவுக்கு இருபத்தி நான்கு பை, எட்டு காலணு. இரண்டு அணு.

5. சன்னியாசி பின்னும் ஐந்தாவது பையைத் திறக்க அதில்நாலணு நிக்கல்நாணயங்களும் வெள்ளி நாணயங்களுமிருந்தன. நாலணுவுக்கு நாற்பத்தெட்டு பைசா,பதினறு காலணு.



6. பின்னும் மற்ருெரு பையைத் திறந்துபார்க்கையில் எட்டு அணு நிக்கல் நாணயங்களும்வெள்ளி நாணயங்களுமிருந்தன. எட்டணுவுக்குத்தொண் ணூற்ரு று பை. முப்பத்திரண்டு கால் அணு. எட்டு அணு. நான்கு அரைக்கால் ரூபாய் இரண்டு கால் ரூபாய்.



7. கடைசியான பையைத்திறக்க ஒரு ரூபாய் வெள்ளி நாணயங்கள் இருந்தன. ரூபாய்க்கு நூற்




றுத் தொண்ணூற்று இரண்டு பை. பதினாறு அணா. எட்டு இரண்டு அணா. நான்கு கால் ரூபாய். இரண்டு அரை ரூபாய். இவ்வளவு பைகளையும் பார்த்து சந்நியாசி மிகவும் ஆனந்த மடைந்தான்.



## 23 போலீஸ்காரர்

மகன்:—ஐயா, கடைத்தெருவில் இன்று அநேக ஜனங்கள் கூட்டமாய் நிற்பது ஏன்?

தகப்பன்:—மகனே, அதோ காணப்படும் கருப்பன் ஜவுளிக்கடையில் ஓர் துணியைத் திருடினான். அதைக் கடைக் காரன் கண்டு பிடித்துப்

போலீஸ்காரருக்குத் தெரியப்படுத்தினன். உடனே போலீஸ்காரன் வந்து திருடனைப் பிடித்துக்கொண்டான். அதை வேடிக்கையாக ஜனங்கள் பார்க்கிறார்கள்.

மகன்:—போலீஸ்காரர் யார்? அவர்கள் எங்கே இருக்கிறார்கள்?

தகப்பன்:—போலீஸ்காரரை எளிதில் எங்கும் இனம் அறிந்து கொள்ளலாம். இவர்களுடைய தலைப்பாகை சிவப்பு நிறம். கால் சட்டையும் மேல் சட்டையும் காக்கி நிறம். அரையில் ஒரு தோல் பட்டை அணிந்திருப்பார்கள். அந்தப் பட்டையோடு ஒரு குறுந்தடியும் தொங்கும். அவசியமான நேரங்களில் துப்பாக்கியும் வைத்திருப்பார்கள்.

ஜனக்கூட்டம் உள்ள முக்கியமான வீதிகளிலும், முச்சந்தித் தெருவிலும், சந்தைகளிலும், நியாய ஸ்தலங்களிலும் போலீஸ்காரரைக் காணலாம். போலீஸ் டாணாவில் போலீஸ்காரர் எப்போதும் உண்டு. அவர்களை மேல் விசாரிக்கும் அதிகாரியின் பெயர் போலீஸ் சப் இன்ஸ்பெக்டர்.

மகன்:—போலீஸ்காரால் நமக்கு வேறு ஏதேனும் பயன் உண்டா?

தகப்பன்:—உண்டு, மிகுதியும் உண்டு. போலீஸ்காரர் பழைய திருடர்களின் ஆட்ட ஓட்டங்

களை ஆராய்ந்து அறிவார்கள். தப்பித்திரியும் குற்ற வாளிகளைக் கண்டுபிடித்து நியாயசபையில் ஆஜர்ப் படுத்துவார்கள். இரவில் ஊரைக் காவல் செய்வார் கள். வண்டிகளின் ஓட்டங்களை நேர்ப்படுத்துவார் கள். சண்டை சச்சரவுகளை விலக்குவார்கள். தெருக்களில் மல ஜலங் கழித்து அசுசிப் படுத்து கிறவர்களைக் கண்டுபிடித்துத் தண்டனை அடை யச் செய்வார்கள். இப்படியாக நாட்டின் சமாதா னத்திற்கும் நல் ஒழுங்கிற்கும் போலீஸ்காரர் இருப் பது மிகவும் அவசியம்.

மகன்:—ஐயா, இன்று தான் போலீஸ்காரர் இருப்பதனால் உண்டாகும் நன்மைகளை அறிந் தேன். நல்லது.

---

## 24 நாய்ப் பாட்டு

இராகம்—'வந்தனம் தந்தோமே' என்ற மெட்டு.

1. நாயைப்போல் நல்லதோர், நண்பனுண்டோ இந்த
நானிலந் தன்னிலேதான்—என் அம்மம்மா
நானிலந் தன்னிலே தான்—

2. வீட்டைக் காவல்செய்யும் பூட்டும் வேண்டுவதில்லை
வேட்டை நாய் ஒன்றிருந்தால்—என் அம்மம்மா
வேட்டை நாய் ஒன்றிருந்தால்—

3. மோப்பம் பிடித்திடும் மோசத்திருடர் தம்மை
மோதியே சென்று காட்டும்—என் அம்மம்மா
மோதியே சென்று காட்டும்—

4. தூரம் போனாலுந்தன் சொந்த வீட்டிற்குத்தான்
தொந்தமுடன் திரும்பும்—என் அம்மம்மா
தொந்தமுடன் திரும்பும்.

5. ஆட்களை அறிவதில் அவர் பணி செய்வதில்
அன்புடன் வாலாட்டிடும்—என் அம்மம்மா
அன்புடண் வாலாட்டிடும்—

6. நண்பனும் செய்யாத நாலா உதவிகளை
நாய்தானும் செய்துவிடும்—என் அம்மம்மா
நாய்தானும் செய்திடுமே—

---

## 25 பலவகைக் கைத்தொழில்கள்

1. நமக்கு அவசியமான அநேக பொருள்கள் உண்டு. நாம் உடுப்பதற்குத் துணிகள் வேண்டும். சாப்பாட்டிற்கு நெல் முதலிய தானியம் வேண்டும். உட்காருவதற்கும் படுப்பதற்கும் நாற்காலி கட்டில் முதலியன தேவை. கத்தி, கோடாரி, அரிவாள், முதலிய கருவிகள் நமக்கு மிகவும் அவசியமான பொருள்கள். பெண்களுக்குப் பொன், வெள்ளி, நகைகள் வேண்டும். கால்களுக்குச் சப்பாத்தும், வெயிலையும் மழையையும் தடுக்கும் குடையும் நமக்கு மிகவும் வேண்டிய பொருள்களே. இவைகளை எல்லாம் நாமே நமக்காக உண்டாக்கிக் கொள்வது சாத்தியம் அல்ல. இவைகளை வெவ்வேறு மனிதர் நமக்குச் செய்து தருகிறார்கள்.

2. பிள்ளைகளே, இந்தப் படத்தைப் பாருங்கள். ஒருபெண் நாட்டுப் பருத்தியில் உள்ள பஞ்சை



எடுத்துக் கதர் நூல் நூற்கிருள். இந்த நூல் நூற்கும் கருவிக்குக் கைராட்டினம் என்று பெயர். இவள் நூற்ற நூலை நெசவுகாரர் கொண்டுபோய், துணி நெய்கிருர்கள். நமக்குத் தேவையான கதர்த் துணிகளை நாம் அவர்களிடம் வாங்கிக் கொள்ளலாம்.

3. இந்தப் படத்தில் சமுசாரி ஒருவன் ஏரிஞல் தன் வயலை உழுகின்ருன். பிறகு இவன் தன்



வயலில் நெல் முதலிய தானியங்களை விதைப்பான். பயிர்கள் வளர்ந்து கதிர் வந்த உடனே அவைகளை அறுத்துத் தானிய மணிகளைச்சேர்ப்பான். சமுசாரி தன் தேவைக்கு மிஞ்சின தானியங்களை விற்பனை செய்வான். தானியம் வாங்க விருப்பம் உடையவர்கள் அவனிடம் போய் வாங்கலாம்.

4. இங்கே தட்டான் ஒருவன் தன் பட்டறையில் இருந்து கொண்டு நகை வேலை செய்



கிருன். அவன் தங்கம் வெள்ளி முதலியவைகளைத் தீயினுல் உருக்குகிருன். பின்னர் அதைச் சுத்தியால் தகடாக அடிக்கிருன். அல்லது கம்பிகளாக நீட்டுகிருன். இவ்வாறு தட்டான் தன் கைத்தொழிலால் அழகிய ஆபரணங்கள் செய்து பெண்களுக்குக் கொடுப்பான். பெண்கள் அவைகளைப் பிரியத்தோடு அணிந்துகொள்கின்றனர்.

5. இந்தப் படத்தில் கருமான் ஒருவன் தன் உலைப் பக்கத்தில் இருந்து வேலை செய்கிருன். அவன் இரும்பினுல் மண்வெட்டி, கோடாரி, அரிவாள், கத்தி, ஆணி, முதலியன செய்து நமக்கு விற்கிருன்.



6. இந்தப் படத்தைப் பார். இது ஒரு சப்பாத்துக் கடை. ஒருவன், உட்கார்ந்து, செருப்பு,



தோல் பை, முதலிய வைகளைச் செய்து கொண்டு இருக்கிறான். கீழே செருப்புகள் ஜதை ஜதையாக வைக்கப்பட்டு இருக்கின்றன. சிறுவர்களும் பெரியவர்களும் தமக்குத் தேவையான செருப்புகளை இங்கே வாங்கிக் கொள்ளலாம்.

7. இந்தப் படத்தில் ஒரு குயவன் சட்டி, பானைகள் செய்கிறான். அவன் பக்கத்தில் அநேக சட்டி பானைகள் அடுக்கு அடுக்காய் இருக்கின்றன. அவைகள் நமக்கு மிகவும் உபயோகப்படுகின்றன. அவைகளினால் நாம் சமையல் முதலானவைகள் செய்கின்றோம்.



8. இவ்விதம் நமக்காகக் கைத்தொழில் செய்கிறவர்கள் அநேகர் உண்டு. அவர்கள் செய்கிற கைத்தொழில்களினால் நாம் பிரயோசனம் அடைகிறோம். அதுபோல மற்றவர்களுக்குப் பிரயோசனம் உள்ளவர்களாய் இருக்கும்படி நாமும் ஒரொரு கைத்தொழிலைக் கற்றுக்கொள்ளவேண்டும்.

கைத்தொழிலே மெய்த்தொழில்
தன் கையே தனக்கு உதவி.
தொழுதூண் சுவையினும் உழுதூண் இனிது.



## 26 சாலமன் ஞானம்

1. சாலமன் என்ற பெயர் உடைய ஓர் அரசன் இருந்தான். கடவுள் அவனுக்கு விசேஷித்த ஞானத்தைக் கொடுத்திருந்தார். சாட்சிகள் இல்லாத வழக்குகளிலும் அவன் நீதியான தீர்ப்பை அருளுவான். ஆகையால் குடி ஜனங்கள் அவனை மிகவும் புகழ்ந்து போற்றுவார்கள்.

2. ஒருநாள் சாலமன் தன் கொலுமண்டபத்தில் இருந்தான். அமைச்சர் முதலியோர் அவனைச் சூழ்ந்து இருந்தனர். அப்பொழுது அருளம்மாள் என்னும் ஓர் பெண் சவக்குழந்தை ஒன்றை ஏந்தியவளாய் வந்தாள். பொன்னம்மாள் என்னும் ஓர் பெண் உயிருள்ள ஓர் குழந்தையுடன் புகுந்தாள். போர்ச்சேவகன் ஒருவன் அருளம்மாளை அதட்டி,

"சீ, மனுஷி செத்த குழந்தையை ஏன் இங்கே கொண்டு வருகிறாய். கேவலம், அதைப் புதைத்துவிட்டு இங்கே வழக்குக்குவா" என்றான்.

3. அதற்கு அருளம்மாள், "ஐயா, நான் அரசனிடம் நியாயம் பெறப்போகிறேன். இந்தச் சவக்குழந்தையைப் பற்றித் தான் வழக்கு. ஆகையால் இதைச் சுமந்தே வழக்குக்குச் செல்லவேண்டும்" என்று அழுது விம்மினள்.

4. அப்பொழுது மற்றொருவன், "அடே, அரசனிடம் நியாயம் தேடிச் செல்பவளை உள்ளே விடு. பாவம், அவளை வெருட்டாதே" என்று உரத்துக் கூறினன். அதுகேட்ட அரசன் அருளம்மாளைத் தன்னிடம் அழைத்தான். பொன்னம்மாளும் உடன் போனாள்.

5. அரசன் அருளம்மாளைப் பார்த்து "அம்மா, உன் அழுகைக்குக் காராணம் யாது? நீ விரும்பும் நியாயத்தைத் தந்து நீதி செலுத்துவேன்! அழாமல் சொல்" என்றான்.

## உடனே அருளம்மாள்

1. ஐயையா ஒருசெய்தி கேளும்—பெரிய
அநியாய வலையில் அகப்பட்டேன்

2. மன்னிய ஓர் அகத்தில்—நாங்கள்
துன்னியே வாழ்ந்தோம் துணையாக

3. சிலநாள் முன் நாங்கள்—இருவரும்
பலநாள் தவத்தின் பாலகரைப்

4. பரிவுடன் பெற்றெடுத் தோம்—பாலகர்
சிறிதும் வடிவில் பேதம் இலர்

5. படுக்கையும் ஒன்றேயாம்—எமக்கு
உடுக்கையும் ஒன்றென உறவுகொண்டோம்

6. நேற்று நடு இரவில்—இவள்தான்
போற்றும் சிசுமேல் புரண்டுருண்டு

7. நித்திரை நடுவாகத்—தன்சிசு
நித்தியம் அடையச் செய்தபின்னர்

8. அறியாத் துயில் இடையில்—எந்தன்
அரிய பாலனைப் பேர்த்தெடுத்து

9. சாப்பிள்ளை எனதென்று—சக்களத்தி
காப்புசெய் மார்பிடங் கிடத்தி விட்டாள்

10. காலையில் வெளியாச்சு—உயிரின்
பாலகன் என்சிறு மைந்தன் என்றே

11. அதனை மறுத்துக் கொண்டு—எந்தன்
மதலைதனைத் தரமாட்டேன் என்பாள்

12. ஐயா இதுவே நான்—உரைக்கும்
மெய்யான வாக்குமூலம் என்றாள்.

6. இதைக் கேட்ட சாலமன் அரசன் பொன்னம்மாள் இடமாகத் திரும்பி, "அம்மா, நீ யாதேனும் கூறுவது உண்டோ? கூறுக" என்றான். அப்பொழுது அவள் சொல்லத் தொடங்கி,

1. யூதர் குலத்துதித்த அம்மம்மா—எமது
ஏதம் இல் அரசே என்உரை கேள்

2. நேற்றுத் துயில் இடையில்—சக்களத்தி
சாற்றும் செயல்லொன்றும் நான் அறியேன்

3. பாலகன் மேல் ஆசை—கொண்ட
சீலம் இலாள் இது செப்புகின்றாள்

4. அவ்வியம் நிறைந்த இவள்—இவ்விதம்
பவ்வியம் இல்லாப்பழுது சொன்னாள்

5. சவச்சிசு இவள் சிசுவே—என்சிசு
தவச்சிசு சிரஞ்சீவி வரம் உள்ளது

6. சவத்தைப் புதைக்கச் சொல்வீர்— இதுஎன்
பவம்இல்லா வாக்குமூலம் என்றாள்.

7. சாலமன் இருவரையும் நோக்கி, உங்கள் வழக்கு நன்றாய் இருக்கிறது. இருவருக்கும் யாராவது சாட்சிகள் உண்டா? என்று கேட்டான். அதற்கு அவர்கள், 'இல்லை அரசே' என்றார்கள்.

8. சாலமன் சிறிது நேரம் யோசித்து, ஒரு சேவகனிடம் திரும்பி, "அடே சேவகா, கூரிய வாள் ஆயுதம் ஒன்று கொண்டுவா" என்றான். அரை நிமிஷத்திற்குள் சேவகன் ஓர் நீண்ட அரிவாள் கொண்டு வந்தான். அரசன் அவனைப் பார்த்து, "சேவகா உயிரோடு இருக்கும் குழந்தையை இரண்டாகப் பிளந்து, பாதியைக் அருளம்

மாளுக்கும் பாதியை பொன்னம்மாளுக்கும் கொடு. சீக்கிரம் பாலகனை வெட்டிப் பிளவு செய்'' என்று கூறினன்.

9. இந்தத் தீர்ப்பைக் கேட்ட அருளம்மாள் ஐயையோ, சிசுவைக் கொல்லவேண்டாம். அதை பொன்னம்மாளுக்கே கொடுத்துவிடுங்கள்'' என்றாள். உடனே பொன்னம்மாள் சத்தம் இட்டு, "அடீ, அருளம்மாள், நீ உன்னையே நல்லவள் என்று காட்டுகிறாய் போலும். உன்னால் நான் கெட்ட பெயர் எடுத்தேன். அரச சபைக்கு வரலானேன். நான் குழந்தையைக் கொன்றேன் என்று கூறினய். அந்த நிந்தையைச் சுமந்துகொண்டு, இந்தக் குழந்தையையும் சுமந்து திரிவேனே? ஆகையால் இருவருக்கும் இது வேண்டாம். அரச பெருமான் அறைந்ததே நியாயம்'' என்றாள்.

10. அப்பொழுது சாலமன் ஆனந்தம் அடைந்தான். "ஆஹா, இப்பொழுது உண்மை வெளியாயிற்று. உயிரோடு உள்ள குழந்தையை அருளம்மாளுக்குக் கொடுங்கள். அவளே அதன் சாவைக் காணச் சகிக்காததாய்'' என்றான்.

11. உடனே அருளம்மாள் தன் குழந்தையைப் பெற்றுச் சந்தோஷம் அடைந்தாள். பொன்னம்மாள் சவக்குழந்தையை எடுத்துக்கொண்டு போகவேண்டியது ஆயிற்று. ஜனங்கள் எல்லாரும் அரசன் கொடுத்த நியாயமான தீர்ப்பின் உண்மையை அறிந்து அவனைப் போற்றினர்கள்.

# 27 கடிதம் எழுதும் முறை

## (1) தந்தைக்குத் தனயன் எழுதுவது.

தூத்துக்குடி.
19—3—'32

தேவரீர் தகப்பனுர் அவர்களுக்குத் தங்கள் அன்புள்ள தனயன் வணக்கமாய் எழுதிக்கொண்டது: இவ்விடம் கடவுள் கிருபையாலும் தங்களுடைய வேண்டுதலினுலும் நான் நல்ல சுகம். இதுபோல் அவ்விடம் தங்கள் சுகத்தையும் தாயார் தமக்கையர், தங்கையர், தம்பிமார் ஆகிய இவர்களுடைய சுகத்தையும் அறிய மிகவும் ஆவலுடையவனுயிருக்கிறேன்.

நான் தினந்தோறும் பள்ளிக்கூடத்திற்கு ஒழுங்காய்ப் போகிறேன். நன்ருய்ப் பாடம் படிக்கிறேன். ஆசிரியர் அன்போடு பாடங்கள் கற்பித்து வருகிருர். என் வகுப்பு மாணவர்கள் யாவரும் எனக்கு நல்ல சிநேகிதர்களாக இருக்கிருர்கள். ஆகையால் நான் மிகவும் சந்தோஷம் உள்ளவனுய் இருக்கிறேன்.

தங்களுக்கும் தாயாருக்கும் என் அன்பின் தோத்திரங்கள்.

இங்ஙனம்:
தங்கள் கீழ்ப்படிதலுள்ள
தனயன், தைரியநாதன்.

## விலாசம் எழுதும் முறை.

விலாசம்

| |
|---|
| மகா-ா-ா-ஸ்ரீ<br>ச. மிக்கேல் பிள்ளை,<br>ஷாப் வியாபாரம்,<br>நாங்குநேரி. |

### (2) தனயனுக்குத் தந்தை எழுதுவது.

நாங்குநேரி,

23—3—'32

சிரஞ்சீவி குமாரன் தைரியநாதனுக்குக் கடவுள் ஆசீர்வாதம் உண்டாவதாக.

நீ அனுப்பிய கடிதம் கிடைத்தது. உன் செய்திகளை அறிந்துகொண்டேன். நீ ஒழுங்காய்ப் பள்ளிக்கூடம் போவதை அறிந்து மிகவும் சந்தோஷப்படுகிறேன். உன் தாயார் உன்னைப் பார்க்க மிகவும் ஆசைப்படுகிறார்கள். நான் வரும்போது உனக்கு வேஷ்டியும் சட்டையும் வாங்கிக் கொண்டு வருவேன்.

நீ உன் பாடங்களை நாடோறும் சரியாய்ப் படித்து ஆசிரியர் சொல்லுக்குக் கீழ்ப்படிந்து நட. எல்லாப் பிள்ளைகளோடும் சமாதானமாய் இரு.

உனக்கு நானும் உன் தாயாரும் அன்பின் முத்தங்கள் அளிக்கிறோம்.

இங்ஙனம்:

உன் அன்பின் பிதா,

மிக்கேல் பிள்ளை.

விலாசம்

சிரஞ்சீவி

தைரியநாதன்,

அர்ச். சவேரியார் பள்ளிக்கூடம்,

3-ம் வகுப்பு,

தூத்துக்குடி.

———

# 28 நீதி மொழிகள்

1. பிள்ளைகளே, உங்கள் பெற்றோருக்குக் கடவுளுக்குள் கீழ்ப்படியுங்கள்.

2. உன் வாழ் நாட்கள் நீடித்திருப்பதற்கு உன் தாயையும் தகப்பனையும் கனம் பண்ணுவாயாக.

3. சொற்களின் மிகுதியில் பாவம் இல்லாமல் போகாது. தன் உதடுகளை அடக்குகிறவனே புத்திமான்.

4. மெதுவான பிரதியுத்தரம் உக்கிரத்தை மாற்றும். கடுஞ் சொற்களோ கோபத்தை எழுப்பும்.

5. நீதி, ஜனத்தை உயர்த்தும், பாவமோ எந்த ஜனத்திற்கும் இகழ்ச்சி.

6. தன் பாவங்களை மறைக்கிறவன் வாழ்வடையமாட்டான். அதை அறிக்கை செய்துவிட்டு விடுகிறவனே இரக்கம் பெறுவான்.

7. ஏழைக்கு இரங்குகிறவன் கடவுளுக்குக் கடன் கொடுக்கிறான். அவன் கொடுத்ததை அவர் திரும்பக் கொடுப்பார்.

8. வழக்குக்கு விலகுவது மனுஷனுக்கு மேன்மை. மூடனானவன் எவனும் அதிலே தலையிட்டுக்கொள்வான்.

9. பொய்ச் சாட்சிக்காரன் ஆக்கினைக்குத் தப்பான். பொய்களைப் பேசுகிறவனும் தப்புவதில்லை.

10. மனுஷனுடைய அகந்தை அவனைத் தாழ்த்தும், மனத்தாழ்மையுள்ளவனே கனம் அடைவான்.

---

## 29 தேசிய கீதம்

1. பாரத நாடதுவாம் எங்கள் தேசம் அன்றோ!
சீரது நிரம்பியதாம் எங்கள் தேசம் ,,

2. பெரியார் பலர் வாழ்ந்ததுவும் எங்கள் தேசம் ,,
அரியகொடை மிகுந்ததுவும் எங்கள் தேசம் ,,

3. செந்தமிழ்த்தேன் ஊறுவதும் எங்கள் தேசம் ,,
பைந்தமிழ்தார் வேந்தர் கொண்டதும் எங்கள் தேசம்

4. ஆண் அறிஞர் அளவிறந்தது எங்கள் தேசம் ,,
பெண் அறிஞர் பெருக் குற்றதும் எங்கள் தேசம்

5. கடவுள் பக்திக் கரைகண்டது எங்கள் தேசம் ,,
கடவுளர் கொண்டாடுவதும் எங்கள் தேசம் ,,

6. தேசபக்தி சான்றதுவாம் எங்கள் தெசம் ,,
நேசர்பக்தி நிறைந்ததுவும் எங்கள் தேசம் ,,

7. சத்தியந் தழைத்ததுவும் எங்கள் தேசம் ,,
நித்தியர்கள் வாழ்ந்ததுவும் எங்கள் தேசம் ,,

8. சற்குருக்கள் தோன்றினதும் எங்கள் தேசம்
கற்பகம்போல் நிற்பதுவும் எங்கள் தேசம் ,,

9. செங்கோல் சிறந்தோங்கினதும் எங்கள் தேசம்
வெங்கொடுமை வேர்அறுப்பதுவும் எங்கள் தேசம்
10. ஆண்மைக்கும் அருளுக்கும் எங்கள் தேசம்
தாழ்மைக்கும் தயவுக்கும் எங்கள் தேசம் ,,
11. உண்மைக்கும் உழைப்புக்கும் எங்கள் தேசம்
வண்மைக்கும் வளத்துக்கும் எங்கள் தேசம் ,,
12. அன்போடு இன்பத்துக்கும் எங்கள் தேசம்
அற்புத இருப்பிடமாம் எங்கள் தேசம் ,,
13. புண்ணியம் விளைப்பதுவும் எங்கள் தேசம்
மண்ணில் சீர் வாய்ந்ததுவும் எங்கள் தேசம் ,,



## 30 இராஜ வாழ்த்து

இராகம் 'கல்லார்க்கும் கற்றவர்க்கும்'

1. வாழ்க மன்னன் வாழ்க வாழ்க
வாழ்க மன்னன் தேவியொடு

வாழ்க ஐந்தாம் ஜார்ஜ் அரசன்
வாழ்க நீடு வாழ்க.

2. சங்கையோடு சற்குணங்கள்
சான்ற பூவின் குழலாள்
மங்கையின் நலம் மலிந்த
மகிஷி மேரி வாழ்க.

3. சக்கரவர்த்தியான எம்
ஜார்ஜ் அரசு வாழ்க
தக்கோராம் வேந்தர் சூழச்
தரணி தன்னில் ஓங்க.

4. மன்னும் நல் மக்களோடு
பன்னெடு நாள் வாழ்க
துன்னும் நல் சுற்றத்தோடு
துன்பம் இன்றி வாழ்க.

5. ஆதிபரம் பொருளின்
அன்பை யுற்று வாழ்க
நீதி என்றும் நாட்டில் நாட்டும்
நிகரில் ஆட்சி ஓங்க.

6. சாதி ஜனங்கள் பாசம்
சாலப்பெற்று வாழ்க
மேதினி தன்னிற் புகழ்
மிகவும் ஓங்கி வாழ்க.

7. ஆரம்பு னைந்த பல
அரசர் ஆண்ட அகில
பாரத நாட்டை ஆளும்
பாக்கியம் என்றும் ஓங்க.

8. இந்தியா முன் னேற்றம்
எய்திடவே வாழ்க
இந்தியர் என்றும் இன்பம்
எய்திடவே வாழ்க.

9. சந்ததி பரம்பரையாய்
சருவே சுரன் அருளால்
விந்தையின் மாட்சி வாய்ந்த
வேந்தர் வேந்தாய் வாழ்க.

---

## 31 செய்யுள். 1.

### கொன்றை வேந்தன்

1. அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்
2. ஆலயம் தொழுவது சாலவும் நன்று
3. இல்லற மல்லது நல்லற மன்று
4. ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்
5. ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்
6. எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்

7. ஏவா மக்கள் மூவா மருந்து
8. ஐயம் புகினும் செய்வன செய்
9. கிட்டாதாயின் வெட்டென மற
10. கீழோ ராயினும் தாழ வுரை
11. குற்றம் பார்க்கிற் சுற்ற மில்லை
12. கூரம் பாயினும் வீரியம் பேசேல்
13. கெடுவது செய்யின் விடுவது கருமம்
14. கேட்டில் உறுதி கூட்டும் உடைமை
15. கோட்செவிக் குறளை காற்றுடன் நெருப்பு
16. சீரைத் தேடின் ஏரைத் தேடு
17. சூதும் வாதும் வேதனை செய்யும்
18. சோம்பவ ரென்பவர் தேம்பித் திரிவர்.
19. தந்தைசொன் மிக்க மந்திரம் இல்லை
20. அஃகமும் காசும் சிக்கெனத் தேடு
21. தீராக் கோபம் போராய் முடியும்
22. திரைகடலோடியும் திரவியம் தேடு
23. தேடா தழிக்கின் பாடாய் முடியும்
24. தொழுதூண் சுவையின் உழுதூண் இனிது
25. நல்லிணக்க மல்லது அல்லற் படுத்தும்
26. நுண்ணிய கருமமும் எண்ணித்துணி
27. நெஞ்சை ஒழித்தொரு வஞ்சகமில்லை
28. பாலோடாயினும் காலம் அறிந்துண்
29. வானம் சுருங்கிங் தானம் சுருங்கும்
30. முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்

31. மூத்தோர் சொல் வார்த்தை அமிர்தம்
32. மோனம் என்பது ஞான வரம்பு
33. பிழையது பொறுக்கிற் பெரியோ ராவர்
34. புலையும் கொலையும் களவும் தவிர்
35. மேழிச் செல்வம் கோழை படாது.

---

## 32 செய்யுள். 2.

### ஆத்திசூடி.

1. அறஞ்செய விரும்பு
2. ஆறுவது சினம்
3. இயல்வது கரவேல்
4. ஈவது விலக்கேல்
5. உடையது விளம்பேல்
6. ஊக்கமது கைவிடேல்
7. எண்ணெழுத் திகழேல்
8. ஏற்ப திகழ்ச்சி
9. ஐய மிட்டுண்
10. ஒப்புர ஒழுகு
11. ஔவியம் பேசேல்
12. ஞயம்பட உரை
13. சுளிக்கச் சொல்லேல்
14. இணக்கமறிந் திணங்கு

15. சேரிட மறிந்து சேர்
16. தந்தை தாய்ப்பேண்
17. நன்றி மறவேல்
18. இளமையிற் கல்
19. கொள்ளை விரும்பேல்
20. கோதாட் டொழி
21. சூது விரும்பேல்
22. சான்றோ ரினத்திரு
23. பெரியாரைத் துணைகொள்
24. மேன்மக்கள் சொற்கேள்
25. செய்வன திருந்தச் செய்
26. தூக்கி வினைசெய்
27. தெய்வ மிகழேல்
28. நோய்க் கிடங்கொடேல்
29. மீதூண் விரும்பேல்
30. பொருடனைப் போற்றி வாழ்
31. வல்லமை பேசேல்
32. கூடிப் பிரியேல்
33. கேள்வி முயல்
34. தேசத்தோ டொத்துவாழ்
35. மாற்றானுக் கிடங்கொடேல்

---

## எழுந்திருக்கிற பொழுது

சேசு, மரியே, சூசை உங்கள் அடைக்கலத் திலே நான் கண் விழித்து, இன்று யாதொரு பொல்லாப்பைக் காணுமலும், நினையாமலும், செய்யாமலு மிருக்கக் கடவேனுக. சேசுநாத ருடைய திருநாமத்தினுலே எழுந்திருக்கிறேன். படுக்கையிலே நின்று எழுந்ததுபோல, சகல பா வத்தையும் விட்டெழுந்து, மறுபடியும் நான் பாவத் தில் விழாதபடி என்னைக் காத்தருளுஞ் சுவாமி.

---

## உதய ஆராதனை

பிதா, சுதன், இஸ்பிரீத்துசாந்துவாகிய திருத் துவ ஏகசர்வேசுரா தேவரீரை வணங்கித் துதிக்கி றேன். தேவரீருடைய திருவாக்கெல்லா முழுமன தோடே விசுவசித்து நம்பி சகலத்தையும் பார்க்க உம்மையே நேசிக்கிறேன். தேவரீர் அடியேனுக் குச்செய்த உபகாரங்களுக்காகவும் விசேஷமாய் என்னை யிந்நேரமட்டும் பிழைத்திருக்கப் பண் ணினதற்காகவும் உமக்கிடைவிடாத தோத்திரம் பண் ணுகிறேன். இன்று உம்முடைய கற்பனை தவ ருமல் நடக்கக் கெட்டியான மனதாயிருக்கிறேன். ஆனதினுல், என் சிந்தனை, வாக்கு, கிரியை, ஆத்

துமம், சரீரம் சகலத்தையும் உம்முடைய பணி விடைக் கேற்ப நடப்பித்துக்கொள்ள உமக்கே கை யளிக்கிறேன். இதல்லாமல், நான் செய்கிற நற் கிரியையெல்லாம் சேசுநாதருடைய புண்ணியங்க ளோடே தேவரீர் கையேற்றுக்கொள்ளும். இன்று அடையக்கூடிய பரிபூரண பலனை நானடைந்து சகல பாவங்களுக்காகவும் உத்தரிக்க மனதாயிருக் கிறேன். உமது அளவில்லாத கிருபையால் என்னை இரட்சித்தருளுஞ் சுவாமி. ஆமென் சேசு.

———

## (i) விவசாயப் பழமொழிகள்.

1. அகல உழுவதை ஆழ உழு.
2. ஆழ உழுதாலும் அடுக்க உழு.
3. உழவர்தானே உலகத்தாணி.
4. வானம் சுருங்கின் தானம் சுருங்கும்.
5. மாரி யல்லது காரியமில்லை.
6. சீரைத் தேடின் ஏரைத் தேடு.
7. பருவத்தே பயிர்செய்.
8. பசித்தவன் பயிறை விளை.
9. தினை விதைக்க வினை விளையுமா ?
10. நிலத்தைப் பொருத்து உரத்தை இடு.

---

## (ii) சுகாதார மொழிகள்.

1. அதிகாலை துயிலெழு.
2. கடவுளை வழிபடு.
3. மலஜலம் தொலைகழி.
4. தந்தம் விளக்கியுண்.
5. மீதுண் விரும்பேல்.
6. கந்தையானாலும் கசக்கிக் கட்டு
கூழானாலும் குளித்துக் குடி.

7. பழங்கறி அருந்தேல்.
8. தண்ணீரில் துப்பாதே.
9. பிணி பரவ விடேல்.
10. பகலில் துயிலேல்.
11. அழுக்கே நோய்க்கிடம்.
12. நோயற்ற வாழ்வே குறையற்ற செல்வம்.
13. லாகிரி யருந்தேல்.
14. பசியில்லாமல் புசியேல்.
15. ஈமொய்த்த பலகாரம் தின்னேல்.







PRINTED AT THE B. N. PRESS, MOUNT ROAD, MADRAS

# எமது பிரசுரங்கள்.

* துரைத்தனத்தார் அங்கீகாரம் பெற்றது.

சிறுவர் செய்யுள் தீபிகை

பதவுரை, பொழிப்புரை, குறிப்புரை, உதாரணக்
கதைகளோடு கூடியது.

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| *உலகநீதி | சுடர் 1 | 0 | 3 | 6 |
| *ஆத்திசூடி | ,, 2 | 0 | 3 | 6 |
| *கொன்றைவேந்தன் | ,, 3 | 0 | 4 | 0 |
| *வெற்றிவேற்கை | ,, 4 | 0 | 4 | 6 |
| மூதுரை | | (அச்சில்) | | |
| பாலர் நீதிக் கதா மலர் (உலகநீதி) | | 0 | 2 | 0 |
| அகஸ்தியர் இலக்கண வினு விடை | | 0 | 2 | 0 |

பாடசாலை டிப்டி இன்ஸ்பெக்டர்

**A. K. டேவிட் B. A. L. T.**

அவர்கள் எழுதிய

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| பொது அறிவு முதல் புத்தகம் 1, 2, 3-ம் வகுப்பு | 0 | 4 | 0 |
| ,, இரண்டாம் புத்தகம் 4-ம் வகுப்பு | 0 | 5 | 0 |
| ,, மூன்றும் புத்தகம் 5-ம் வகுப்பு | 0 | 6 | 0 |

பாடசாலை டிப்டி இன்ஸ்பெக்டர்

**V. M. சவுந்திரராஜ ஐயர், B. A. L. T.**

அவர்கள் எழுதிய

| | | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|---|
| திருநெல்வேலி ஜில்லா பூகோளம் | | | 0 | 5 | 0 |
| ரோச் தமிழ் வாசகம் | | | | | |
| முதல் புத்தகம் | முதல் | வகுப்பு | 0 | 2 | 6 |
| இரண்டாம் ,, | இரண்டாம் | ,, | 0 | 3 | 0 |
| மூன்றும் ,, | மூன்றும் | ,, | 0 | 3 | 6 |
| நான்காம் ,, | நான்காம் | ,, | 0 | 4 | 6 |
| ஐந்தாம் ,, | ஐந்தாம் | ,, | (அச்சில்) | | |
| எண்சுவடி:—நூதன முறைகள் அடங்கியது | | | 0 | 1 | 6 |

---

**A. V. D. பாக்கியம் பிள்ளை,**

புத்தக வியாபாரம்,

தூத்துக்குடி.